ஓம் தத் சத்.

தத்துவராயசுவாமிகள் அருளிச்செய்த

# சசிவன்னபோதம் மூலமும்



இந்திரபீடம் கரபாத்திரசுவாமிகள் ஆதீனம்

ட்றைசை ஸ்ரீ அருணாசல சுவாமிகள்

இயற்றிய உரையும்.

இவை ஷை உரையாசிரியர் மாணாக்கர்

ஈசூர் ஸ்ரீ சச்சிதாநந்த சுவாமிகள்

பரிசோதித்த பிரதிக்கிணங்க

ஒற்றியூர் ஞானாசிரியர் ஸ்ரீ ஆறுமுக சுவாமிகள்

மாணவர் வேதாந்தப் பிரசங்க மாமேகம்

ஸ்ரீ ரா. சுப்பிரமணிய ஆச்சாரியார்

அவர்கள் வேண்டுகோளின்படி

ஷை ஆதீனம் தண்டறை ஸ்ரீசுப்பராய

ஆச்சாரிய சுவாமிகள் மாணவர்

மதுரை எஸ். கந்தசாமி பிள்ளையால்

தமது மதுரை ஸ்ரீமீனாம்பிகை பிரசில்

பதிப்பிக்கப்பெற்றது.

[...]திப்பு.

[...]1. [அணா 10.

ஓம்.

பரப்பிரஹ்மணேநம:

# சிவன்ன போதம்.



உரைச் சிறப்புப்பாயிரம்.

ஈ.சூ.ரா. ஸ்ரீ சச்சிதாநந்தசுவாமிகள்

இயற்றியருளிய

நேரிசையாசிரியப்பா.

திருந்தகு தெய்வத் திருவா ரூரிற்
குருந்தரு சுகாதனங் கொண்டுவீற் றிரு
பொருளல் லவற்றைப் பொருளெனக் கொளளு
மருளிஃ தென்று மயக்கறக் காட்டுந்
தேசிற் சிறந்த சிவப்பிர காச



## உரைச் சிறப்புப்பாயிரம்.

முவாமதி வந்திவர்ந் துலவுமா ளிகைகிரை
தவாப்பிறை யாறெனுந் தண்டமிழ் நாட்டின
னறிவன்றி யில்லை யறிவன வெல்லா
மறிவாக் காண்டற் காவன வாக்கிய
வாதிசங் கரனன் றணிபெற நாட்டிய
பேதியா விந்திர பீடத் தமர்ந்து
திருத்துருத் தியின்கட் சீர்பெற விளங்குங்
காபாத் திரனெனுங் கடவுளா தீனத்
திற்குரி யவனுந் திருநா கையிலொளிர்
சிற்பிர காசத் திருவரு ளாசல
வடிகளுக் கடிய னனுபவ ரசமாய்ப்
படிமிசைத் திகழ்பவன் பதைப்பற நோக்கித்
தன்னைத் தாற்குத் தக்கவன்
மன்னரு ளாசல மகானுபூ தியனே.

---

உரையாசிரியரது

## பிரஹ்ம ஸ்துதி.

அதிதபூ ரணமா யெங்கு
மாகியு மாகா தென்றும்
புதியதாம் பரமா னந்த
போதனைப் புணர்ந்து வாழ்வாம். (க)

தேவர்மா னிடர்மற் றுள்ளோர்
முனிவரர் சிந்தைக் கெட்டா
மூவரு மறையும் போற்று
முதல்வனைப் போற்றல் செய்வாம். (உ)

## விநாயக ஸ்துதி.

வேறு.

தில்லை வாழ்கற் பகன்பதஞ் சிந்திக்க
நல்லின் நூற்குரை நாவி னுதிக்குமே. (ந)

## சுப்பிரமணிய ஸ்துதி.

சிதம்பரத்தில்வாழ் சிங்கார வேலவன்
பதம்ப ணிந்துரை பன்னப்பா லிக்குமே.



## நடேச ஸ்துதி.

புண்ட ரீக புரத்தனைப் போற்றவித்
தண்ட மிழ்க்குரை தானேவி ளங்குமே.

## சிவகாமி ஸ்துதி.

புலியூர் வாழுஞ்சிற் பூவையைப் போற்றவே
வலிய வந்துரை வாய்த்திடுங் காணுமே.

## குரு ஸ்துதி.

வேறு.

திருத்துருத்தியின் மேவிவாழெங்க
டேசிகன் கரபாத்திர
னருட்பணிக்குரியோர்பதம்
பணிந்தன் பினலருணைகைவாழ்
குருபரன்னருணசலப் பெயர்கொண்ட
தேசிகன் கோதிலா
விருபதம்பணிந்திந்த நூற்குரை
செய்வன்யாவு மிலங்கவே. (எ)

## அவையடக்கம்.

### வேறு.

பிரமகூ டத்தன் றன்னிற்
பிரிவற நிறைந்து நின்ற
தரமற விளங்குஞ் சோதித்
தற்பரன் றன்னைக் காட்டு
முரையது முளவோ வென்னி
லொளிர்பளிக் கதனைக் காண
மரைமுகந் தோன்று மாயோன்
வயங்கிடு மென்பர் மேலோர். (அ)

இவ்வுரை செய்தோன் வாக்கி
னெளிமைபோ லிஃதென் றெண்ணித்
திவ்விய வுணர்வின் மிக்கோர்
செப்பிடா ரஃதென் னென்னிற்
கவ்விய பொருளி லக்க
வுயர்வினை வரைந் தோன் றீனஞ்
செவ்விய பொருளோன் றன்னைச்
சேர்ந்திடா ததனு மாதோ. (கூ)



## நூற்பெருமை.

தரணிபுகழ் தத்துவனூர் தாமுரைத்த ஞானப்
பரணிதனைக் கட்டவிழ்த்துப் பார்க்கிற்—கரணமுடன்
சேர்ந்துமண வாது சிவமணமே பூரித்துச்
சாந்தமண நாறுமே தான். (க)

## நூலாசிரியரது சொரூப வணக்கம்.

படைப்பானும் வியன்ஞாலங் காக்கு மாறிப்
படையானும் படைத்தளிக்கப் பட்ட வெல்லாந்
துடைப்பானுஞ் சுருதிகளுந் தொழுது போற்றுஞ்
சொரூபானந் தச்சுடரைத் தொழுதல் செய்வாம். (உ)

முன்னூற்றொடர்பு.

அருவ ...வினு மன்பர்க் குருவமாய்
வருவ னென்பது மாமறை காணுமே. (௩)
தேவி யிப்படி கூறத் திருவுளம்
பாவி யேற்கில தென்று பதைக்கவே. (௪)

பாடுதுறை—பல்லி.

அருவுருவ லானுருவ மாகிவரு மாகில்
ஆதிமறை தேடரிய வண்ணல்வரு மாகிற்
சுருபனென்னை யுடையநல தோழன்வரு மாகிற்
றுளக்கமற நல்லதிசை சொல்லுசிறு பல்லி
ஓடுமன நம்மினுட னுறவுசெயு மாகில்
உள்ளநிலை மெள்ளவுணர் வாகிவரு மாகில்
காடுமிட மெங்குமறி வாகிவிடு மாகில்
நல்லதா னல்லதிசை சொல்லுசிறு பல்லி.

# இந்நூற்கு அவதாரிகை.



வடமொழியில் அமைந்து மாட்சிமை பெற்று மறைமுடிவின்கண் விளங்கும் மகாவாக்கியத்தின் இலட்சியார்த்தமாகிய அத்துவித சொரூபமே சிரவணாதிகளால் ஐயந்திரிபறத் தானெனத் தேர்ந்த **தத்துவராய சுவாமிகள்**

தாம்பெற்ற சுவானுபவப் பேறு எளிதில் யாவர்க்கும் விளங்கக்காருண்யத்தால் தன்பாற் பொங்கி தென்னூல் பிரபந்தங்களில் பதினேழாவதாயுள்ள மோகவதைப் பரணியில் அபரிச்சின்ன வஸ்து வணக்கமே கடவுள் வாழ்த்தும்,

மகான்கள் வாக்குத்திறத்தலே கடைதிறப்பும்,

தாபத்திரயமே பாலை வனமும்,

பிரபஞ்சத்தவரே புறச்சோலைப் பேய்களும்,

அவர்களிற் சற்கிருத்திய முள்ளவர் களே உட்சோலைப்பேய்களும்,

பிரம சமுகமே பலபீடமும்,

சுத்தமாயையே காளியும்,

சிற்சத்தியே ஆலவிருட்சமுமாம் எனப் பரணிக்குரிய அவயவங்களாகத் தொகுத்து மேற்கூறிய பேய்க்கணங்கள் உணவில்லாமற் பசியால்மெலிந்து தேவி பாற்சென்று முறையிட அதற்குத்தேவி,

நிரதிசயானந்தத்தைப் பிரமமாகவும்,

அதனது பகிர்முக சங்கற்பத்தை மாயாசத்தியாகவும்,



அக்கூட்டரவிலுதித்த சங்கற்பத்தை மானத புத்திரனாகவும்,

அதனது பகிர்முக சங்கற்பத்தைப் பிரவிர்த்தியென்னு மூத்த மனைவியாகவும்,

அதனது அந்தர்முக சங்கற்பத்தை நிவிர்த்தியென்னும் இளைய மனைவியாகவும்,

மூத்தாள் முயக்கிலுதித்த மயக்கத்தை மோகனென்னும் புத்திரனாகவும்,

இளையாள் முயக்கிலுதித்த தெளிவை விவேகனென்னும் புத்திரனாகவும்,

அம்மோகத்தைச் சார்ந்த சங்கற்பங்களைக் காமனாதிய படைத்தலைவராகவும்,

அவ்விவேகத்தைச் சார்ந்த சங்கற்பங்களை நிருபகனாதிய படைத்தலைவராகவும்,

காமனுதிய படைத்தலைவர் காரணமா யுதித்த சங்கற்பங்களை மோகனது சேனு சமுத்திரமாகவும்,

நிரூபகனுதிய படைத்தலைவர் காரண மாயுதித்த சங்கற்பங்களை விவேகனது சேனுசமுத்திரமாகவும் கற்பித்து

பிரமத்திற்கு இளவரசாயுள்ள மானத னென்பவன் தனது தாயாகிய மாயை என்பவளின் அனுமதி பலத்தைப் பெற் றுத் தனது தந்தையாகிய பிரமத்தைச் சிறைச்சாலையிற் பந்தனஞ் செய்து,

தனது மூத்த மனைவியின் மகனை மோகனுக்குப் பட்டந்தரித்து

தனது இளைய மனைவியின் மகனை விவேகனை மோகன் சொன்னவாறு கேட் கும்படி அவன் வசப்படுத்திப்போக,



அன்றுமுதல் காமனுதிய மந்திரா லோசனைத் தலைவர்கூடி விவேகனுதி யருக்குக் கொஞ்சம் இடங்கொடுத்தால்

நமது பிதாமகனுகிய பிரமத்தினது சார்பு பெற்று அவர்கள் நம்மைத் தமது வசப் படுத்திச் சகிக்கபடா இடுக்கண் செய்து

அலைச்சலைக் கொடுத்துவிடுவார்கள். ஆதலின் இவர்களைத் தலையெடுக்காது அடக்கிவதைசெய்து அஞ்ஞானந்தகாரத் தால் மூடப்பெற்ற

செகதாரண்ணியத்தில் விடயமென் னுங் காய்கனிகளைத்தின்று சீவித்திருக்க எத்திசையிலும் காணமல் துரத்திவிடு வதே நலமென்றுலோசித்து அவர்களைத் துரத்திவிட்டார்கள்,

அப்போது விவேகன் நிரூபகனாதிய
மந்திராலோசனைத் தலைவரைக் கூட்டி

இனி யாம் எவ்விதத்தாலேனும்
நமது பிதா மகன் சார்புபெற்று அவரது
சிறை தவிர்த்தற்கும்,

பிதாமகி சார்பொழித்து மோகனாதி
யரை நமது வசப்படுத்திக் கருவறுத்
தற்கும்

எங்ஙனஞ் செய்தால் யாவரும் சுக
முறுவார்களென்பதற்கும்

எவ்விதமுயற்சியால் இவர்கள் செயிக்
கப்படுவார்களென்பதற்கும்

ஏற்ற ஆலோசனையிலிருக்கையில்

அஃதுணர்ந்த அவ்வநிதப் பிரமந்
தானே



சொரூபானந்தரென நாமரூபங்
கொண்டு விவேகனாதியர்பால் எழுந்
தருளிவந்து அவர்கட்கு அனுக்கிரகிக்க

அவ்வனுக்கிரகத்தை அவர்கள் மிக்க
உபபலமாகக்கொண்டு, மோகனாதியரை
நிர்மூலப்படுத்தி வெல்ல,

அங்ஙனம் வென்ற போர்க்களத்
தின்கண் சிதைந்துள்ள மாமிசாதிகளைப்
பாகஞ்செய்து அதனைப் புறச்சோலைப்
பேய்கட்கும்

அஸ்திபாதிகளையிடித்துக் கூழ்செய்து
அதனை உட்சோலைப் பேய்கட்கும்,

அவற்றின் பவப்பசிதீர அளிக்கும்
முயற்சி நடக்கப்போகின்றது.

இஃது உங்கள் நல்லகாலமெனத்
தேவி பேய்கட்குக் கூறியதாக வகுத்து,

"அருவ னாயினு மன்பர்க் குருவமாய் வருவன்."

என்பதற்கிணங்க ஓரிதிகாசமுண்டா மெனத்தோன்றிய ஐயந் தவிர்த்தற்கு

விஷ்ணு முதலிய தேவர்களுக்குப் பரமசிவன் உபதேசித்த இதிகாசத்தைத் தானே இங்கே முத்தி கூறல் என்னும் அத்தியாயமாக்கி

அதில் அவ்வதீதப் பிரமமே **மாநந்தி பராயணனாக** வடிவங்கொண்டு எழுந்தருளி வந்து சசிவன்னனுக்கு அனுக்கிரகித்த உபதேச சம்பிரதாயத்தைக் கூறுதல்.

———



## நூல்.

### அவதாரிகை.

பக்குவவான்கள் தமது பவத்துன்ப நீங்குமோவெனத் தபிக்கும் அச்சநீக்கி அவர்களை அகமுகப்படுத்துதல்.

### கவி.

அலகை யச்ச மறவக வான்களு
முலகின் முத்தி பெரும்பரி சோதுவாம்.

### இதன் பொருள்.

அலகை —சமயவான்க ளென்னும் பேய்களது
அச்சமற —பவப்பிணிக்கஞ்சு மச்சந்தீர
அகவான்களும் } அகம்பாவச் சிரேட்டரும்
உலகில் —பிருதிவியண்டத்தில்
முத்திபெறும் பரிசு } முத்தியடையு மார்க்கத்தை
ஓதுவாம் —சொல்லுவாம்.

(கருத்து) முத்திபெறும்பரிசு அலகைக் கன்மையானும், முன்னர்ச்சமயவான்களையே பேயெனக் கற்பித்துக் கூறினமையானும், இங்கே யலகை யென்றதற்குச் சமயவான்க ளெனவும், முமூட்சுத்துவம், சமாதிசட்கசம் பத்து, இகமுத்திரார்த்த பலபோக விராகம் நித்தியாநித்திய வஸ்து விவேகம், யோகம், கிரியை, சரியை, நாஸ்தி, நபாதித்துவம், இம்மை மறுமைக்கேற்ற சிந்தனை கனவினு மின்றிக் கண்டதே காட்சி கொண்டதே கோலமாய் சிற்கு மவுட்டிக தசையோரையே அகம்பாவச்சிரேட்டரெனவும், ஏனையகதிக ளிலின்றி முத்திப்பேறு மக்கட்கதி யிலாத லானும், அம்மக்கட் பேறுக்கிடம் பிருதிவி யண்டமாதலானும், இங்கே யுலகென்றற்குப் பிருதிவியண்டமெனவு முரைகொண்டாம். அகவான்களு மென்பதற் கந்தர்முகிகளுமெ னப் பொருள்கொள்ளின் அவர்கள் முத்தி பெறும் பரிசோதுவதாற் சிரேட்டமில்லை;



ஆதலிற் கூடாது. சாதன முதிர்ந்தோரு மன்றி யேனையோருமெனப் பொருள்தராக் கிடந்தஅகவான்களுமென்பதின்கண்ணுள்ள உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.

வினா:—சமயவான்களை அலகையென்ற தென்னை?

விடை:—வாச்சியார்த்த லட்சியார்த்தங் களைச் சுருதிகாரணமாயன்றித் தற்பிரத்தி யட்சகாரணமாயுணராமையானும், அங்ஙன முணராவிடத்து அகம்புறத்தி னிறைவாய்த் தமக்கு விளங்குவது விடயகதப் பிரத்தியட்ச மாதலானும், அவ்விடயகதப் பிரத்தியட்சத் தினின்றும்அவர்கூறும்வாச்சியலட்சியார்த்த சித்தாந்த முரணுமாதலானும், அங்ஙன முர ணுதல் தெரியாதுரைக்கும்வசனம் முன்னுக் கும் பின்னுக்குஞ் சம்பந்தமற்ற வுளறலா யமையுமாதலானும், அவ்வுளறல் பேய்க்குண மாகலானு மென்க.

வினா:—பரமேசனாதிய தேவர்களாலும்
முனிவர்களாலும் விதிக்கப்பெற்றது சமய
மன்றோ?

விடை:—ஆம். அவாங்மனோ கோசர
மாய்த் தானே தானாக விளங்குவது முத்தி
யாதலின் அதனை வெளிப்படுத்து நிமித்தம்
நான்கு பூதத்திலும் வியாபித் திருப்பது மன்
றியு மவைகளாக விளங்கியு மொருவர்க்குந்
தோன்றாது நிற்கும் பூதாகாயத்தைக் காண்
பிக்கு நிமித்தங் கடாகாய முதலிய வாகாயத்
தைக் காண்பித்து அவற்றைநீக்கிப் பூதா
காயத்தை வெளிப்படுத்துஞ் சாதிருசியத்
தைப் போலப் பிரகிருதி முதற் பிருதிவி
வரையினும் வியாபித்திருப்பது மன்றியு
மவைகள் தானாக விளங்கியு மொருவருக்குந்
தோன்றாது நிற்குஞ் சிதாகாயத்தை யாவர்க்
குந் தரிசிப்பிக்கச் சாதிருசியமாகக்கூறிய பிம்
பப் பிரதிபிம்ப ஞாயத்தாற் சமயோத்தமா



கப் பக்குவத்தளவுக் கேற்கச் சீவேசுவர
கூடத்த பிரமமெனவும், அதற்கதீதஞ் சுத்
தப் பிரமமெனவும், இதுவே தானெனவுங்
கற்பித்துக் கூறியதைப் பூருவபட்ச மென்
றுஞ் சித்தாந்தமென்றுமுய்த்துணரவகையறி
யாது அந்தந்த அவசரநிலையே உண்மைப்
பொருளெனக்கருதி மேற்றாவாது அங்கங்கே
தியங்கி நிற்பார் அந்நெறிச்செல்ல வேதாந்த
முதல் உலகாயுதமீறாக்கிடந்த சமஸ்த சமயங்
களும் விதிக்கப் பெற்றன வென்க.

வினா:—அற்றேல், வேதநாதர் அபிப்பிராய
மிது தானோ?

விடை:—இதுவே யாமென்க.

(இதன் தாற்பரியம்.) உலகத்தின்கண்
சமயத்தினுஞ் சமயாதீதத்திலும் உள்ள
முமூட்சுக்கள்பளுவான மார்க்கங்களை இருதி
யாகக்கருதித் தவியாமல் அவர்கட்குச் சுளு
வான மார்க்கமாயுள்ளமுத்திகூறலைக் கருணை
யாற் கூறினாரென்பதாம். (1)

### அவதாரிகை.

மேன்முத்தி பெறும் பரிசென்பது ஞானிகள் கிருபாநோக்கத்தாலெனல்.

### கவி.

புணர்ந்த பாவ மெலாம்பரி பூரண
முணர்ந்த ஞானி விழிபட வோடுமே.

(இதன் பொருள்.)

புணர்ந்த —சங்கற்பத்தாலணைந்த
பாவமெலாம்—பாவகன்மங்களனைத்தும்
பரிபூரணம் —யாவுஞ் சின்மாத்திரமாக
உணர்ந்த ஞானி } தெளிந்த ஞானவானது
விழிபடஓடும்—கடாட்சந்தங்க நீங்கும்.

(பதசாரம்.) தனது சங்கற்பத்திலுண்டான சிவேசுர சகத்து முதலிய கற்பித மனைத்திலுங் கூடுதலைப் **புணர்ந்த பாவமெலாம்** எனவும், அச்சங்கற்பர் தன்னிற்கரைந்து யாவையுந்தானாக விளங்குவதைப் பரிபூரண



**முணர்ந்த ஞானி** எனவும், இவ்விளக்கப் பார்வையால் சகல கன்மமு நசித்தலை **விழிபடவோடும்** எனவுங் கூறினார். இங்ஙனங் கூறுதற்குப் பிரமாணம் ஞானநூற் பலவினுமுள்ள உபதேசகாண்டத்திற் காண்க.

**வினா:**— "தாந்தா முன் செய்த வினை தாமே யனுபவிப்பர்" என்னும் ஔவை வாக்கியப்படியும், 'தானே சங்கற்பித்துத் தன் மாத்திரத்தால்" என்னும் வாசிட்ட வாக்கியப் படியும், தனது சங்கற்பத்தின் அறியாமையினாற் கட்டுப்பட்ட சஞ்சிதமாதிய வினைகளனுபவித்தாவது அச்சங்கற்பத்தின் அறிவினால் அவ்வினைகள் எரித்தாவது தீரவேண்டுவதே அன்றி ஒருவர் சங்கற்பத்தினால் உண்டான வினைகள் ஒருவர் சங்கற்பத்தினால் எங்ஙனந் தீரும்?

**விடை:**— "பஞ்சினை யூழித் தீப்போற் பலசன்ம விவித வித்தாஞ் சஞ்சித மெல்லா

ஞானத் தழல்சுட்டு வெண்ணீருக்கும்.''
"ஐயனே யெனது ளேநின் றனந்தசன் மங்களாண்ட, மெய்யனே யுபதேசிக்க வெளிவந்த குருவே போற்றி'' என்ற கைவல்லிய நவநீதப்படியும், "ஆனந்தந்தரு அறிவேசீடன்'' என்ற தத்வாத்திரையசாமிகள் சம்பிரதாயப்படியும், "தேட்டந் திரண்ட திருமேனி'' என்ற வள்ளலார் வாக்கியப்படியும் தனதறிவிற்கு ஆதாரமான ஆனந்தோதயத்தில் அவ்வறிதல் கரைதலால் அவ்வினைகணீங்கு மென்க.

(இ-ம்.) சித்தே ஆனந்தம் ஆனந்தமே சித்தென்ற ஒருமையான பிரமமே ஒருருவாகவந்து அனுக்கிரகிக்கும் ஞானாசாரியர் விழியின் மகிமை கூறியதாம். (2)

### அவதாரிகை.

அதனையுடையவனது மகிமையும், அம்மகிமையுள்ள ஓரிதிகாசமும் கூறல்.



### வேறு.—கலி.

எழிலாரு ஞானி புகழென்னை கூற
வுயர்வீ டிவன்சொல் வழிசெய்
தொழிலாள ராகை யதுகேளு முன்னை
யிதிகாச மொன்று சொலவே.

(இதன் பொருள்.)

எழிலாரும்—(யாவற்றையும் விளக்கிக் கொண்டிருக்கின்ற) பிரம தேஜசு மிகுந்த
ஞானிபுகழ்—ஞானவானது புகழை
என்னைகூற—என்னென்று சொல்ல
உயர்வீடு—மேலான மோக்ஷமானது
இவன்சொல் வழிசெய் } இஞ்ஞானவானுபதேசக் கிரமத்தின்படி நடக்கும்
தொழிலாளராகை—அடியார்களாதல்
முன்னை யிதிகாசம் } (இவ்வாறுள்ள) பூர்வசரித்திரம்
ஒன்று—ஒன்றிருக்கின்றது

சொலவே யதுகேளு } அதை யாஞ்சொல்ல நீ கேட்பாய்.

(இ-ம்) ஞானவானது மகிமையை அவனடிமையைமுன்னிட்டும், இஃதுண்மை என்பதை ஓரிதிகாச முன்னிட்டுங் கூறியதாம். (3)

(அ-கை.) அவ்விதிகாசம் இதுவெனப் பொதுப்படக்கூறல்.

கவி.

தந்தாப முற்ற பரனேவல் செய்த
வவனுற்ற பேறு தனைமுன்
செந்தா மரைக்கண் முதல்வற்கெம் மண் [ணல்.
திருவாய் மலர்ந்த திதுவே.

(இதன் பொருள்.)

தந்தாப முற்ற —தனதுதாபத்திரயம்நீங்க
பரனேவல்செய்த—குரு சிசுருஷை செய்த
அவன் —அப்புருடன்
உற்றபேறு தனை —அடைந்த கதியை



முன் —பூருவத்தில்
செந்தாமரைக்கண் } சிவந்த தாமரைமலர் போன்ற கண்களையுடைய
முதல்வற்கு —முதல்வனாகிய விஷ்ணுவுக்கு
எம்மண்ணல்—எமது பரமசிவன்
திருவாய் மலர்ந்தது } அனுக்கிரகஞ் செய்தது
இதுவே —இக்கதையேயாம்.

தாபமென்றது-தாபத்திரய துன்பங்களை.

(இ-ம்.) அவ்விதிகாசம்வந்தது இவ்வாறென்பதாம். (4)

(அ-கை.) அவ்விதிகாசத்தில் முத்திபெற்றானிவனெனல்.

கவி.

உவமிப்பின் ஞானி விழிபட்டு முன்னை
வினைவிட்டு முத்தி யுலகிற்
றவமற்ற வெய்ய வினையே புரிந்த
சசிவன்ன னெய்து கதையே.

(இதன் பொருள்.)

உவமிப்பில்—ஒப்பிடப்படாத [கந்தங்கி
ஞானிவிழிபட்டு—ஞானவானது கிருபாநோக்
முன்னைவி } முன்னுள்ள சஞ்சிதமாகிய
னை விட்டு } வினைகள் நீங்கி
முத்தி —மோட்சத்தை
உலகில் —இவ்வுலகத்தின்கண்
தவமற்ற —அவமாகிய
வெய்யவினை } கொடியதீவினையேசெய்த
யே புரிந்த }
சசிவன்னன் —சசிவன்ன னென்பவன்
எய்து கதையே —அடைந்த கதையேயாம்.

(இ-ம்.) அவ்வரலாற்றின் முத்திபெற்ற சிடனது நாமத்தைக் கூறியதாம். (5)

(அ-கை.) அவனது தீவினையின் வலி இங்ஙனமெனல்.

கவி.

ஏமம் புகல்வா ருளர்பா தகரா
மியாவர்க்குளு மிக்கவ னுகுமிவ



னுமம் புகல்வார் குலமும் மெரிவாய்
நரகம்புகு மாறு நடந்தனனே.

(இதன் பொருள்.)

ஏமம் —விடயானந்தமே
புகல்வார் —கதியாக அடைந்தவர்களுக்கு
உளர் —உலகத்திற்கு பாத்தியராயுள்ள
பாதகராம் —பாவிகளாகிய
யாவர்க்குளும்—அனைவருக்குள்ளும்
மிக்கவனுகும்—மிகுந்தவனான
இவன் —இந்த சசிவன்னன்
நாமம்புகல் } தனது நாமஸ்மரணஞ் செய்த
வார் } வர்களும்
குலமும் —அவர்கள் வம்சமும்
எரிவாய் —அக்கினிமயமாகிய
நரகம் புகு } மாபூதி என்னும் நரகத்தை
மாறு } அடையும்படி
நடந்தனன்—நடந்துகொண்டான்.

குலமு மென்றது—இறந்தது தழீஇய எச்ச உம்மை.

(இ-ம்.) இவனதுபெயரை உரைத்தவனும் அவனது குலமும் அடையுங்கதியைக்கூறினதாம். (6)

(அ-கை.) அவ்வலியால் தன்வமிசப் பிதிரர்க் குற்றது கூறல்.

கவி.

மலமேவிய தீவினை யின்வலியால்
மகிழும்பர் பதத்தி லிருந்தவிவன்
குலமேவிய தென்புல வாணர்களுங்
கொடிதாரர கங்குடி யேறினரே.

(இதன் பொருள்.)

மலமேவிய—மும்மலப் பெருக்கால் விளைந்த
தீவினையின்—கொடிய பாவகிருத்தியத்தின்
வலியால் —வலிமையினால்
மகிழ் —மகிழத்தக்க
உம்பர்பதத்தில்—சுவர்க்கத்தில்
இருந்த —சுகித்துக்கொண்டிருந்த



இவன் குல மேவிய } இவன் வம்சத்திற் பிறந்திறந்த
தென்புல வாணர்களும்—பிதிர்க்களும்
கொடி தாரகம்—இரவுரவநரகத்தில்
குடியேறினர் —குடியேறினார்கள்.

(இ-ம்.) தமது சத்கிருத்தியத்தாற் சுவர்க்கத்தின்கண் மகிழ்ந்திருந்த இவன்வம்சத்தாரனைவரும் இவனது துர்க்கிருத்தியத்தால் அம்மகிழ்ச்சியை நீங்கி நரகதுன்பத்தை அடைந்தார்களென்பதாம். (7)

(அ-கை.) மறுமையில் அனுபவிக்கத் தக்க வினைப்பயன் அனைத்தும் இம்மையிற்றானே இவன்பாலெய்தினவெனல்.

கவி.

மிகமேவிய புண்ணிய பாவமெனும்
வினையின்பயன் மேலொரு காலமுறு
திகமேவரு மென்பத னுளதோ
வெல்லாமிவ னைச்சேற வெய்தினவே.

(இதன் பொருள்.)

மிகமேவிய—வரையின்றிவிளைந்த

புண்ணியபாவமெனும் } நல்வினை தீவினைப்
வினையின் பயன் } பிரயோஜனங்கள்

மேலொரு } மேற்பவுஷியகாலத்தில்
காலமுருது } அடையாமல்

இகமே —இப்போதே

வருமென் } அனுபவிக்கவருமெனச் சுருதி
பதனல் } சொல்லுகின்றபடியினல்

உளதோ —மேலிவனநுபவிப்பதென்ப துண்டோ

எல்லாம் —தீவினைப்பயனனைத்தும்

இவனைச்செற } இச்சசிவன்னனை யிம்மைக்
வெய்தின } கண்ணே மிகவுமடைந்தன.

**வினு:**—ஒருவன் செய்தவினை செய்தவனையேயன்றி எனையோரையும்இயக்குமோ?

**விடை:**—ஆத்மசம்பந்தம், சீவசம்பந்தம், கரண சம்பந்தம், இந்திரிய சம்புந்தம், தேக சம்பந்தமெனக் கிடந்த ஐந்தனுள்,



**ஆத்ம சம்பந்தமாவது:**—ஞானசிரியாது உபதேச லட்சியார்த்தத்தினில் நிலைத்த சீடன் தற்சுதந்தரமின்றி அவரது பூரண நோக்கிற் சம்பந்தித்தலின் அவர்கதி இவனுக்கு மாதல்.

**சீவ சம்பந்தமாவது:**— காமியாசாரியர் உபதேசவழியினின்ற சீடன் அவராணையால் இயாகாதி கன்மங்களிற் சம்பந்தித்தலின் அவர்போகம் இவனுக்கும் வருதல்.

**கரண சம்பந்தமாவது:**—அரசன் மனதிற்கு இயைந்த அமைச்சராதியோர் அவனாணையிற் சம்பந்தத்தின் அவனது செங்கோலே இவர்கட்குமாதல்.

**இந்திரிய சம்பந்தமாவது:**—மகளிரது பார்வைக்கியைந்த அவள் வழிபட்டவளும் இவ்வாருகத் தம்பாலியையப்பெற்ற விடனெருவன் அவ்வளது சயிக்ஞைப்படி ஆலிங்கனச்சேட்டையிற் சம்பந்தித்தலின் அவள்சுகமே இவனுக்குமாதல்.

தேக சம்பந்தமாவது:—மாதா பிதாக்களது சுக்கில சோணிதப் புணர்ச்சியால் உருப்பட்ட மக்கள் அவ்விருவர் உடலினூமூறிச் சம்பந்தித்தலின் அவர்கட்குரிய வடிவமும் நோயு மிவர்கட்கும் வருதலன்றியும் தேகசம்பந்தப் பிதிரர்கள் இத்தேக நீங்கி யாதனுசரீரம் பெற்று மறுமைக்கண் வசித்தலினனும், அவர்களினி வேருேர் பவுதிகவுடல் வருமளவுந் தமது விந்துசம்பந்தப் புத்திரர்கள் பலப்பிராப்திக்கு எதிர்நோக்கி யிருத்தலினுலும், இவர்கட்குரிய புண்ணிய பாவப்பயன் அவர்கட்கும் உரித்தாதல்.

ஆதலின் இவற்றுள் தேகசம்பந்தத்தால் இயக்குமென்க.

வினு:—இவர்களடைந்தகதி அவர்களும் அடையவேண்டுமோ?

விடை:—இவர் முத்திபெற்ற பலன் அவர்கள் பௌதிகசரீரத்தோடு அனுட்டித்திருந்த பலனை முற்றச்செய்து அவர்களைச் சுவர்க்கத்திற் சேர்க்குமென்க.



"மாதா பிதாக்கள் செய்தது மக்களைச் சாரும்" என்ற பழமொழிப்படி தேக சம்பந்தத்தால் வந்த சீவர்களான புத்திர பௌத்திரர்களால் வரும் நன்மை தீமைகளிற் கிஞ்சித்து அக்குலப் பிதிரர்களைச் சாருமென்பதனுற் பெற்றும்.

(இ-ம்.) இத்தேகத்திற்ருனே ஆதிவியாதியான பவத்துன்பத்தை இவனடைந்ததைக் கண்டனமென்பதாம். (8)

(அ-கை.) தந்தை பரமாசாரியாராதலால் இவனது துன்பந்திர ஆலோசித்தாரெனல்.

கவி.

தன்புத்திர னேயம் விடாமையினுற்
றவறுற்ற விவற்பெறு தந்தையுளந்
துன்புற்றினியென்னை கொலோபுதல்வன்
றுயர்தீர்வகை யென்று சுழன்றனனே.

(இதன் பொருள்.)

தன்புத்திரனேயம் விடாமையினால் } தனது புத்திரவாஞ்சை நீங்காமையால்
தவறுற்ற —சிரமந்தவறிய
இவற்பெறு —இவனைப்பெற்ற
தந்தையுளம்—பிதாவின் மனம்
துன்புற்று—துன்பத்தையடைந்து இனிமேல்
புதல்வன்றுயர் தீர்வகை } புத்திரனது துன்ப நீங்கு மார்க்கம்
என்னைகொலோ வென்று } என்னவிதத்தாலோ வென்று
சுழன்றனன்—கலங்கினான்.

(இ-ம்.) புத்திரனைச் சுகிக்கச்செய்தல் பிதாவிற்குக் கடமையாதலால் இத்துன்பத்தை நீக்கும் விதியை ஆலோசித்தார் என்பதாம். (9)

(அ-கை.) ஆலோசித்த பின்னர் இவனைக் கூட்டிக்கொண்டு தீர்த்த யாத்திரை செல்லுதல்.



கவி.

ஒன்றாலும் வினைத்துயர் துய்ப்பதலா
  லொழிக்கு முபாய முணர்க்கிலதே
யென்றாலு மறிந்திவ னன்புவிடா
  திவனைக்கொடுழன்றன னெங்கணுமே'

(இதன் பொருள்.)

வினைத் துயர் } தான் செய்த வினையினால்வருந் துன்பங்களை
துய்ப்பத லால் } தான் புசித்துத்தீரவேண்டுவ தேயன்றி
ஒன்றாலும்—யாதொரு உத்தியினாலும்
ஒழிக்குமுபாயம்—நீக்குகின்ற வுபாயம்
உணர்க்கிலதே யென்றாலும் } சிந்தித்தற் கரிதென்றாலும்
அறிந்து —இவன்படும்வேதனையை யறிந்து
இவனன்பு விடாது } இப்புத்திரன் மேல்வைத்த பிரிய நீங்காமல்
இவனைக்கொடு—இவனையழைத்துக்கொண்டு

உழன்றன } பெரியோர்கள் வசிக்குந் தல
னெங்கணும் } மெல்லாஞ் சுற்றினான்.

உன்னற்கென்றது—உனற்கென இடைக் குறையாயிற்று.

(இ-ம்.) இத்துன்பம்ஞானிகளாற் தீர வேண்டுமென்று அறிந்து அவர்கள்இருக்கும் இடந்தேடினன் என்பதாம். (10)

(அ-கை.) அங்ஙனஞ் சென்றவிடத்துத் தெய்வகதியால் எதிருற்றஆப்தன் இவனுக்கு இவ்வியாதி வந்திருக்குங் காரணமும் அது நீங்கும் பருவமுந் தெரிந்து அதற்குரிய அவுடதங் கூறல்.

கவி.

ஒருமாதவன் மற்றிவன் வேதனைகண்
டொழிவற்றுள வொன்றையுளத்துண
பரமாகிய ஞானிகள் கண்ணுறலே [ரும்
பரமௌடதமென்று பகர்ந்தனனே.



(இதன் பொருள்.)

ஒருமாதவன்—ஒரு மகான்
மற்றிவன்வேதனை கண்டு } இவனது கொடிய நோயைப் பார்த்து
ஒழிவற்றுள—பரிபூரணமாயுள்ள
ஒன்றை—பரவஸ்துவை
உளத்துணரும்—அறிவினாலறிந்த
பரமாகிய—பிரமமாகிய
ஞானிகள்—ஞானவான்கள்
கண்ணுறலே—தமதருட்கண்சாற்றலே
பரமௌடதமென்று } இவ்வியாதிக்குமேலான மருந்தென்று
பகர்ந்தனன்—சொன்னான்.

(இ-ம்.) தேடுற்ற இடத்து எதிருற்ற ஆப்தன் இத்துன்பம் ஞானிகள்பூரணநோக்கால் தீரவேண்டுமென்று அறிவித்ததாம். (11)

(அ-கை.) அங்ஙனமுள்ள ஞானவான் இங்ஙனம் இருக்கின்றாரெனக் கூறல்.

கவி.

தானந்த மிலாத தனைத்தருவான்
சத்தீச்சுர மென்னு மிடந்தனில்வாழ்
மானந்தி பராயண னென்பவனின்
மைந்தற்குறுநோய்க்குமருந்தெனவே.

(இதன் பொருள்.)

தானந்தமிலாத — ஆதிமத்தியாந்தரகிதமான
தனை — தனது சொரூபத்தை
தருவான் — அடியார்களுக்குக்கொடுப்பவன்
சத்தீச்சுரமென்னு மிடந்தனில் வாழ் } சத்தீச்சுரமென்னுந் தலத்தில் வசிக்கின்ற
மானந்திபராயண னென்பவன் } மானந்திபராயணனென் னுநாமத்தையுடையவன்
நின்மைந்தற்கு — உனது புத்திரனுக்கு
உறுநோய்க்கு } பொருந்திய ஆதி வியாதியான பிணிக்கு
மருந்தென — அவுடதமென்று சொல்ல.

(இ-ம்.) அறியாக்குறியும் அறிகுறியும் உரைத்தனன் என்பதாம். (12)



(அ-கை.) ஆப்த வாக்கியப்படி சென்று அந்த ஞானவானைக் கண்ணுற்றுத் தனையனது அனுபவங் கூறல்.

கவி.

முடியாவுப தேசமி தென்றிவனம்
முனிவன்பத மெய்தி மொழிந்தனனிக்
கொடியான்வெரு வாது குயிற்றியநோய்
கூறற்கரி தாய கொடுந்தொழிலே.

(இதன் பொருள்.)

முடியா வுபதேச மிதென்று } இவ்வுரை வரையற்ற வுபதேசமென்று
இவன் — இச் சாந்த சீலன்
அம்முனிவன் பதமெய்தி } அம் மகான் பாதத்தை யடைந்து
மொழிந்தனன் — சொன்னான்
இக்கொடியான் } இக்கொடியவனான வெனது புத்திரன்
வெருவாது — பயப்படாமல்

குயிற்றியநோய் —செய்த கிருத்தியங்கள்
கூறற்குஅரிதாய—சொல்லுவதற்குமுடியாத
கொடுந்தொழில்— துர்க்கிருத்தியங்கள்.

(இ-ம்.) இவன்செய்த துர்க்கிருத்தியங்கள் அளவில்லை என்பது தோன்ற அவற்றைச் சுருக்கிக் காட்டியவாறும்: (13)

(அ-கை.) கூறவே அவர் இவன் செய்த வினையின் திறமறிந்து அருள் நோக்கஞ் சாற்றல்.

கவி.

ஈங்குன் றிருமுன் பகரும் படியோ
விவனெய்திய தீவினை யென்னவெலா
நீங்கும்படி தன்னனு பூதியினா
னிகழும்விழி வைத்தன னின்மலனே.

(இதன் பொருள்.)

ஈங்கு —இவ்விடத்தில்
உன்றிருமுன் —தேவர் சன்னிதியில்
பகரும்படியோ—சொல்லத்தக்கதோ



இவனெய்திய —இவனடாத்திய [சொல்ல
தீவினையென்ன—கொடியவினைகளையென்று
எலாம்—சஞ்சிதாகாமியங்களால் வரும்
நல்வினை தீவினைகளனைத்தும்
நீங்கும்படி —விட்டுநீங்கும்படி [னால்
தன்னனுபூதியினால்—தனது சுவானுபூதியி
நிகழும் —விளங்குகின்ற [னன்
விழிவைத்தனன்—கிருபாநோக்கம் வைத்த
நின்மலன் —களங்கமற்றவன்.

(இ-ம்.) இஃது அவனதுபக்குவம்பார்த்து அருட்கண் சாற்றினது அறியுந் திருவடி தீட்சை என்பதாம். (14)

(அ-கை.) இந்நோக்கத்தால் ஆதி வியாதி இரண்டும் நீங்க அதனைத் தந்தை கண்டு தனது இடத்திற்கு ஏகுதல்.

கவி.

கணியாத பவக்கடு வானதிருக்
கண்வைத்தலும் விட்டன காதுகடும்

பிணியாவையு நல்லபிதா விறைதாட்
　　பேணிப்பணியென் றுபெயர்ந்தனனே.

(இதன் பொருள்.)

கணியாத —கணித்தற்கரிய
பவம் —பவப்பிணிகட்கு
சடுவான —விடம்போன்றுள்ள
திருக்கண் வைத்தலும் } கிருபா நோக்கம் வைக்கவும்
காது —வருத்துகின்ற
கடும்பிணி யாவையும் } கொடிய சஞ்சிதவினையும் தேக வியாதிகளுமாகியவனைத்தும்
விட்டன —அவனைவிட்டுநீங்கின
(அதனைக்கண்டு) [வன்
நல்லபிதா—சன்மார்க்கமுடையதந்தையான
இறைதாள்—இந்தமகானது திருவடியை
பேணிப்பணி யென்று } அன்புற்று வணங்கி நிற்பா யென்று
பெயர்ந்த னன் } அவனைவிட்டுத்தன் பதிக் கேகினன்.



(இ-ம்.) அவ்வறியுந் திருவடி தீட்சையால் எய்திய பயனைத் தந்தை கண்ணுற்றுத் தன்பதிக்கு ஏகினன் என்பதாம். (15)

(அ-கை.) தந்தை வாக்கியப்படி ஆசிரியர் தொண்டின் மிக்கான் ஆயினனெனக் கூறல்.

கவி.

இடனேமுத லாக வுவந்திறையோ
　　னேவும்பணி செய்திவ னுஞ்சிலநா
ளுடனேயிவ னத்திரு மேனிதனக்
　　குரியானென வுற்றன னும்பனுடே.

(இதன் பொருள்)

இடனே முதலாக } இங்ஙனம் ஆசிரியர்க்கு அடிமையாகப் பிதாவிடுத்துப் போன நாள் முதல்
உவந்து —மனமகிழ்ந்து
இறையோன்—ஆசிரியர்
ஏவும்பணி —ஏவியபணிவிடைகளை

இவனும் —இச்சசிவன்னனும்
சிலநாள் செய்து—சிலதினஞ்செய்து
உடனே —அப்போதே
இவன் —இச்சசிவன்னன் [மேனிக்கு
அத்திருமேனிதனக்கு—அவ்வாசிரியர் திரு
உரியானென—உரியவனென்று உலகுரைக்கும்படி
உற்றனனும்பனேடே } அருளிறையோடு தேகமுஞ் சாயையும் போலப்பொருந்தினன்.

(இ-ம்.) ஆசிரியர் பணியின் முதிர்ந்தனன் என்பதாம். (16)

(அ-கை.) அக்குருபணிமேலீட்டாற்சாதன சதுஷ்டயமுதயமாயினன் எனக்கூறல்.

**கவி.**

நன்றுமுனிதாள் வழிபா டதனு
ஞனுவித மான பிறப்பினை விட்
டொன்றுகிய வீடுண ருத்தமர்கட்
குளசாதன நாலு முதித்தனவே.



(இதன் பொருள்.)

நன்றும் —செவ்வையாகிய
முனிதாள் —ஆசிரியரது திருவடியின்
வழிபாடதனல் —வழிபாட்டினல்
நானுவிதமான —பலவிதமான
பிறப்பினைவிட்டு—பவங்களைநீங்கி [தை
ஒன்றுகியவீடு—தனிமையானதிருவாணபதத்
உணருத்தமர்கட்கு—அறியும் ஞானிகளுக்கு
உளசாதனநாலும்—உரியசாதனசதுஷ்டயங் [கள்
உதித்தன—தாமே யுண்டாயின.

(இ-ம்.) வெளிப்படை. (17)

(அ-கை.) அச்சாதன மேலீட்டால் தனது அபிப்பிராயத்தைக் குறிப்பித்தல்.

**கவி.**

முனிவன்றிரு முன்புள தன்குறைதான்
மொழிவன்சில வஞ்சலிகுஞ்சியதாய்ப்
பணிவந்திரு கண்கள் பதங்களிலே
பலகால்வலம் வந்து பணிந்திடவே.

(இதன் பொருள்.)

முனிவன் திருமுன்பு } ஆசிரியராகிய சன்னிதானத்தில்
உளதன்குறை—தனக்குள்ள குறைவுபாட் [டை
மொழிவன்சில—சிலசொல்லுவன் [கொண்டு
அஞ்சலி குஞ்சியதாய்—சிரசிற் கைகுவித்துக்
பனிவந்திரு கண் } இரண்டுகண்களிலும் ஆனந்த பாஷ்பம் பெருகி
பதங்களிலே—ஆசிரியர் திருவடிகளில்
பலகால் —பலதரம்
வலம் வந்து—பிரதக்ஷணம் வந்து
பணிந்திட —வணங்க.

(இ-ம்.) தீர்த்த யாத்திரையால் சித்த சுத்தியும் அச்சித்தசுத்தியினால் குற்றேவலும் அக்குற்றேவலாற் சாதனசதுஷ்டயமும் அச்சாதன சதுஷ்டயத்தால் பவத்துன்பமும் அப்பவத்துன்பத்தால் அதுநீங்கும் பக்குவமும் எய்தின என்பதாம். (18)



(அ-கை.) சீடனது பக்குவத்தைக் குறிப்பினால் அறிந்து அதனை வெளிப்படையாக்கு நிமித்தம் தெரியாதவர்போல் வினவுதல்.

கவி.

அருளேவடி வாகிய மாமுனிதா
னறியாதவர் போல வழுங்கலுறும்
பொருளேதென மைந்த னடுங்கினனிப்
பொல்லாத பவப்புண ரிக்கெனவே.

(இதன் பொருள்.)

அருளே —பிரம காருண்ணியமே
வடிவாகிய —ஓர் சொருபமாகி வந்த
மாமுனிதான்—மானந்திபராயணர்
அறியாதவர் போல } இவன் பக்குவந் தெரியாதவர் போல
அழுங்கலுறும் —மனவருத்தப்படும் [க
பொருளேதென—பொருள்யாதென்றுகேட்
மைந்தன் —சீடனான சசிவன்னன்

இப்பொல்லாத பவப்புணரிக்கு } இந்தக்கொடியபவ சமுத்திரத்திற்கு
நடுங்கினன்என—பயந்தேன் என்றுசொல்ல

(இ-ம்.) பவத்துன்பம் நீங்கு நிமித்தம் அதனை வெளிப்படுத்தினன்என்பதாம். (19)

(அ-கை.) பவத்துன்பம் அதிகரிக்கு நிமித்தம் பவத்தைச் சாகரமாக உருவகப் படுத்திக் கூறத் தொடங்கல்.

கவி.

வெருவும்பிற விக்கடல் வித்தரமுன்
வேதாகம கீதை விளம்புமதைக்
குருவுந்தன தன்பன் மனத்தளவிற்
கொளுமாறு தொகுத்திது கூறிடுமே.

(இதன் பொருள்.)

வெருவும் —பயப்படத்தக்க
பிறவிக்கடல் —பவ சமுத்திரத்தின்
வித்தரம் —விலாசத்தை



முன் —முன்னமே
வேதம் —வேதங்களும்
ஆகமம் —ஈசுரவாக்கியமான வாகமங்களும்
கீதை —அரிபிரமராற் சொல்லப் பட்ட கீதைகளும்
விளம்பும் —சொல்லும்
அதை —அவ்விஸ்தாரத்தை
குருவும் —ஆசிரியரும்
தனதன்பன் —தனது சீடனது
மனத்தளவில்—மனதிற் கொள்ளத்தக்கது எவ்வளவோ அவ்வளவு
கொளுமாறு —ஏற்கும்படி
தொகுத்து —சுருக்கி
இதுகூறிடும் —இதனைச் சொல்லுவர்.

மனத்தளவி லென்பது:—இம்மனமித் துன்ப மொறுக்குமளவுமெனக் கொள்க.

(இம்.) பவத்துன்பத்தைஇனித்தாங்கச் சக்தியில்லை என்று அறிகிற பரியந்தம் பகுத்துக் கூறத்தொடங்கியவாறும். (20)

(அ-கை.) இக்கவிமுதல் ஐந்து கவியால் பவத்தைச் சாகரம்என்று அதற்குஉரிய அங்கங்கள் இனையவெனக் கூறல்.

கவி—வேறு.

மரண பவங்களான புனலை யுடையது
  மதியை விழுங்குகாம வரவு பெரியது
கரண வொழுங்கறுத விடய விரைநுகர்
  கணமொடியங்குமீனமிகவுமுகழ்வதே.

(இதன் பொருள்.)

மரணபவங்களான—சனனமரணங்களாகிய

புனலையுடையது —சலத்தை யுடையது

மதியை விழுங்கு —அறிவை விழுங்குகின்ற

காமவரவு —காமமென்னும் பாம்பு

பெரியது —மிகப்பெரியது

ஒழுங்கறுத —இடைவிடாதுள்ள

விடயவிரை நுகர் } விடயமாகியவிரைகளைத் தின்னுகின்ற



கரணம் —கரணமென்னும்

கணமொடியங்கு மீனம் } கூட்டம் கூட்டமாகத் திரிகின்ற மச்சங்கள்

மிகவுமுகழ்வது —மிகவும் குதிக்கின்றன

உகழ்வது-தொகைஒருமை. இங்கேகரண மென்றது அகக்கரண புறக்கரணங்களை.

கவி—இதுவுமது.

பெருமிகமென்றகூறுபெருமையுடையது
  பிணிகளெனுங்கெடாதபுலவுகமழ்வது
வருமிட ரின்பமான திரைகள் பொருவது
  மனமெனும்வஞ்சராச மகரமுறைவதே.

(இதன் பொருள்.)

பெருமிதமென்று —மதக்களிப்பென்று

கூறும் —சொல்லும்

பெருமையுடையது—மாட்சிமையுடையது

பிணிகளெனும் —வியாதிகளென்கிற

கெடாத —நசியாத

புலவுகமழ்வது —நாற்றம் வீசுகின்றது
வருமிடரின்ப மான } மாறிமாறி வருஞ்சுக துக்கங் களான
திரைகள் பொருவது—அலைகளடிக்கின்றது
மனமெனும் —மனமென்கின்ற
வஞ்சம் —கபடமுள்ள
ராச மகர முறைவது } தலைமையான மகர மச்சம் வசிக்கின்றது.

மனமெனும் அந்த ராசமகரம் எனப்பாடமோதுவாருமுளர். (22)

கவி—இதுவுமது.

அளவி லகந்தை யாமை யபரிமிதமுள
வவாவெ னிறந்தவாழ மறியவரியது
களவு நெருங்குபாரு மலையுமுடையது
கலகவிடங்கண்மேவு கிரிமிநெளிவதே.

(இதன் பொருள்.)

அளவி லகந்தை } வரையின்றிய வகம்பாவமென்னும்



ஆமை யபரிதமுள—ஆமைகளனேகமிருக்கின்றன
அவாவென் —அவாவென்கிற
இறந்த ஆழம் —அளவிறந்த ஆழமானது
அறியவரியது —அறிதற்கரியது
களவுநெருங்கு —கரவென்னும் நெருங்கிய
பாருமலையு முடையது } பார்களையு மலைகளையு முடையது
கலகம் —கலகமென்னும்
விடங்கள் மேவு —விடங்கள் தங்கிய
கிரிமி நெளிவது —புழுக்கணெளிகின்றன.

கவி—இதுவுமது.

துகளெனு நன்கிலாத நுரைகடருவது
துறவினிலின்பமான கரையைவிடவகல்
மகளி ரெனுந்தவாத வலிய சுழியது
மறலியு மஞ்சுகோப வடவை யெரியதே.

(இதன் பொருள்.)

துகளெனும்—குற்றமென்கிற
நன்கிலாத —கிஞ்சித் நன்மையில்லாத

நுரைகள் —நுரைகளை
தருவது —தந்துகொண்டேயிருப்பது
துறவினில் —சகலத்தியாகத்தின் கண்ணே
இன்பமான } நிரதிசயானந்த [மும்
கரையைவிட } கரையை விட்டுவிட
அகல் —விலக்குகின்ற
மகளிரெனும்—ஸ்திரீகளென்னும்
தவாத —நீங்காத
வலியசுழியது—கொடிய சுழியையுடையது
மறலியுமஞ்சு —யமனுநடுங்கத்தக்க
கோபம் —கோபமாகிய [யது
வடவை யெரியது—வடவானலத்தை யுடை

கவி—இதுவுமது.

வெருவரு கின்றபோக முதலை யடர்வது
விவித மனந்தமான துறையு மறிபவ
ரொருவர் கடந்து போக விரகி லெழுபவ
வுததி விளம்பயார்வ ருலகி லறிவரே.



(இதன் பொருள்.)

வெருவருகின்ற —அஞ்சத்தக்க
போகம்—செல்வமென்னும் [கின்றன
முதலையடர்வது—முதலைகள்நிறைந்து இருக்
விவிதம் —நாநாவிதமான
அனந்தமான —அளவின்றிய
துறையும் —மார்க்கங்களையும்
அறிபவர் —அறிகின்றவர்களில்
ஒருவர் —ஒருவராவது
கடந்துபோக—இக்கடலைக் கடந்து செல்ல
விரகில்—யுக்தியில்லையானல் [னளவை
எழுபவவுததி—எழுபிறப்பென்னும்கடலி
விளம்ப —யாஞ்சொல்ல
உலகில் —இவ் உலகின்கண்
யாவரறிவர் —எவரறிவார்கள்

இவ் ஐந்து கவியின் தாற்பரியம்.

சீடனை அகமுகப்படுத்தப் பவத்துன்பத்தின் பயங்கரத்தைப் பகுத்துக் கூறியவாறும். (25)

(அ-கை.) பவக்கடலின் தீமையைக் கூறியது நீங்கும் கருவியும் நீங்காக் கருவியும் இஃதெனக் கூறல்.

கவி.

பொறிவழி சென்று மீளு மவல மதிகொடு
பொருசம யங்களா று வறிய விழுமதி
லறிவழிவொன் றிலாத பொருளதெனவுள
வனுபவ வங்கமேறு மறிஞ ரகல்வரே.

(இதன் பொருள்.)

பொறிவழி —இந்திரியங்கள்வழியாய்
சென்று மீளும் —போக்குவரத்துள்ள
அவலமதி கொடு } ஐயந்திரிபருப்புத்தி யென்னுந் தெப்பத்தைக்கொண்டு
பொரு —பொருள் நிச்சயத்தால் ஒன்றற்கொன்று முரணுகின்ற
சமயங்களாறும்— ஆறுசமயத்தார்களும்
அறிய —முத்தியடைவான் வேண்டி
விழுமதில்—அப்பிறவிக்கடலில்விழுவார்கள்
அறிவு —அறிவானது



அழிவொன்றிலாத—அழியாத
பொருள தென } பிரமவஸ்துவெனச் சுருதியுக்திகளால் நிச்சயிக்க
உள —அகனுற்சமாதியின்கண்ணுண்டான
அனுபவவங்க மேறும் } சுவானுபவ மென்னுங் கப்பலிலேறிய [கடப்பார்.
அறிஞரகல்வர்-அறிவுடையோர் அக்கடலைக்

அவலம்—பயனின்மை. அஃதாவது ரூபாரூபங்களுக்கு ஆதாரம் இனையதெனத் தேராமை.

(இ-ம்.) தன்னை விகற்பித்துக் காண்பார் பவக்கடலில் விழுதற்கேதுவாய சங்கற்பங்களை யெட்டி அறியாத அவலமதி யெனவும், விகற்பங்கள் தோறும் தன்னைக் காண்பார் அப்பவக் கடற்கரை ஏறுதற்கு ஏதுவாயது தனது வியாபக விளக்கத்தையில் அவ்விகற்பங்கள் கிஞ்சித்தும் தோற்றாத அனுபவ வங்கமெனவுங் கூறியவாறும். (26)

(அ-கை.) முற்கூறிய வுதிகளின் முன் கூடாதென்பதையும் மேற்கூடுமென்பதை யும் வற்புறுத்திக் கூறுதல்.

**கவி.**

புணரி கடந்துபோக விரகி லெனமொழி
  பொழுதுபுலம்பியாவி புதல்வனிருமுன
முணர்வெனும் வங்கமேறு மறிஞ ரகல்ரென்
  றுரையைவழங்கிநாதனுவகையருளவே.

(இதன் பொருள்.)

புணரிகடந்து —பவக்கடலைக் கடந்து
போக—சமயமார்க்கங்களால்அறியுமுத்தியா
  யாகிய கரையைச்சேர
விரகிலென —யுத்தியில்லையென்று
மொழிபொழுது—சொன்னமாத்திரத்தில்
புலம்பி —நாமென்செய்வோமென்றழுது
ஆவிபுதல்வன் —சீடனுயிரானது
இறுமுனம்—விசனத்தினுற் பிறிவதற்குமுன்
உணர்வெனும்வங்கம்—ஞானமாகியகப்பலில்



ஏறுமறிஞர் —ஏறுமகான்கள்
அகல்வரென்று —கடப்பார்களென்று
உரையைவழங்கி—சொல்லைச் சொல்லி
நாதன் —குருநாதன் [விக்க
உவகையருள—சீடனுக்கு சந்தோஷம்விளை

(இ-ம்.) பிராணபாயமான பயத்தை வரு வித்துச் சாம்பிராச்சியமான பதத்தை அடை யுஞ் சந்தோஷத்தையும் உடனே தோன்றச் செய்தனர் என்பதாம். (27)

(அ-கை.) ஆசிரியர்சொல்லிய மகிழ்ச்சி யினற் பவத்துன்பநீங்கிப் பரமசுகத்தை அடையும்பொருட்டு ஞானனுக்கிரகஞ்செய்ய வேண்டுமென வினவுதல்.

**கவி—வேறு.**

வாழியென விறைவனடி
  தொழுதுவரு பவமா
மாழியினை யகலுமறி
  வருளுகென வவரே.

(இதன் பொருள்.)

வாழி யென — தேவரீர் எப்பொழுதும்வாழக் கடவதென்று
இறைவனடி தொழுது — குருபதத்தைப் பணிந்து
வருபவமா மாழியினை — அடியேனுக்கு மாறாதுவந்து கொண்டிருக்கும்பவக்கடலை
அகலுமறிவு — நீங்குவதற்கேதுவானஞானத்தை
அருளுகென — அனுக்கிரகிக்கவேண்டுமென்று சீடனிரக்க
அவர் — அதற்கவ்வாசிரியர்

(இ-ம்.) வெளிப்படை. (28)

(அ-கை.) சீடன் வினவிற்கு உத்தரங் கூறத்தொடங்கி ஞானவகை யினையவெனக் கூறல்.

கவி.

பரவறிவு மபரவறி
வெனமிரு பரிசாந்
திரவறிவை யறியுமவர்
மொழிவர் தெளிவுறவே.



(இதன் பொருள்.)

பரவறிவு — பரஞானமெனவும்
அபரவறிவெனவும் — அபரஞானமெனவும்
இருபரிசாம் — இரண்டுதன்மையாகவிளங்கும்
திரவறிவை — திரமான சகசஞானத்தை
அறியுமவர் — அனுபவமாயறியுஞ் சத்துக்கள்
மொழிவர் தெளிவுற — இவற்றைத் தெளிவாகச் சொல்லுவர்

(இ-ம்.) சாக்ஷாத்கார ஞானமே தன் வடிவெனக் காணுசிமித்தம் அறிவின் தொகுப்பைப் பகுத்துக் கூறினதாம். (29)

(அ-கை.) முற்கூறிய ஞானவகைகளின் தன்மையைக் கூறல்.

கவி.

அபரவுணர்வருமறைகண் முதலகிலகலையு
முபரமமதறவுதவுமுணர்வுபரவுணர்வே.

(இதன் பொருள்.)

அருமறை கண்முதல் — உணர்தற்கரிய வேதங்கள் முதலிய

அகிலகலையும்—சகல வித்தியா ஞானமும்
அபரவுணர்வு—அபரஞானமாம்
உபரமமது—அந்தப் பிரமசொரூபத்தை
அறஉதவும்—மிகவும் தானெனத்தரும்
உணர்வு—யதார்த்த ஞானம்
பரவுணர்வு—பரஞானமாம்

சகல வித்தையென்றது—இருக்கு, எசுர், சாமம், அதர்வணம். அங்கம் 6, சாத்தியம் 4 என்னும் இப்பதினான்கையும்.

(இ-ம்.) விசாரத்தால் உதிப்பது அபர ஞானமெனவும் சமாதியின்கண் விளங்குவது பரஞானமெனவும் கூறப்படுமென்பதாம்.

(அ-கை.) முற்கூறிய பரஞான மபரஞான மென்னும் இரண்டனுள் அபரஞானத்தின் அபிப்பிராயந் தெரிந்து ஒருவர் ஓதவேண்டு மெனல்.



கவி.

புராணமிதி காசமெவை
யும்பொரு ளனைத்தின்
பிராணனறி யாதுள
விடத்திவை பிதற்றே.

(இதன் பொருள்.)

புராணம்—பதினெண் புராணங்களிலும்
இதிகாசம்—பாரதாதி யிதிகாசங்களிலும்
எவையும்—இவைபோன்ற மற்றெந்நூல்க ளிலுஞ் சொல்லுகின்ற
பொருளனைத்தின்—எல்லாப்பொருள்களின்
பிராணன்—உயிர்ப்பான அபிப்பிராயத்தை
அறியாதுள } தெரிந்துகொள்ளாத
விடத்து } விடத்து
இவை—படித்துக்கொண்ட இவையாவும்
பிதற்று—முன்பின்கெட்டபிதற்றலாகமுடியும்

(இ-ம்.) நூல்களிற் கூறும் உபக்கிரமோப சங்காரங்களின் அபிப்பிராயம்நன்றுய்த்தெரி

யின் அவற்றின் பயனாகிய அபர ஞானம் உதிக்கும் என்பதாம். (31)

(அ-கை.) இவ்விருவகை உணர்வடைந் தோர் இங்ஙனம் உள்ளாரெனல்.

**கவி.**

ஆகம விதங்களறி வாரபர மறிவார்
யோகமொடுறங்குபவரேபரமுணர்ந்தார்.

(இதன் பொருள்.)

ஆகம விதங்கள றிவார் — வேதங்களிற்கூறும் பலவிதமான பொருள்களையுந் தெரிந்து ஒன்று படுத்தும் நிச்சயஞானிகளே
அபரமறிவார் —அபரஞான முணர்ந்தோரா வார்
யோகமொ டுறங்குமவரே — பிரமத்திலொன்றுபடச் செய்யுஞ்சமாதிஞானிகளே
பரமுணர்ந்தார்—பரஞான முணர்ந்தவராவர்

(இ-ம்.) வேதாகமங்களிற் கூறிய் மரபின் படி கலாசோதனை செய்ததனுற் சேடித்த



வஸ்துவே பரமென நிச்சயமாகத்தெரிந்தவர் அபர ஞானிகளெனவும், அப்பரத்தோடு அடங்கும் சமாதிஞானிகளே பரஞானிகளெ னவும் பொருள்படக் கூறியவாறும். (32)

(அ-கை.) ஞானம் இனையதெனவும் அஞ் ஞானம் இனையதெனவும் விளக்கல்.

**கவி.**

இயலறிவ திசையறிவ தினமறிவ துளதா
மயலறிவ தறிவதல வறிவறிவ தறிவே.

(இதன் பொருள்.)

இயலறிவ திசையறிவ தினமறிவது — இயலிசை நாடக மென்னு முத்தமிழையுந்தீரவறிவது
உளதாம்—உண்டாயிருக்கும் (ஆயினுமஃது)
அயலறிவது—தன்னை வேறாயறிவதேயன்றி
அறிவதல—தன்னையுள்ளவாறறியு ஞானமல்ல
அறிவறிவது — அறிவு கற்பிதமின்றித் தன்னைத் தானாக வறிவது
அறிவு —எதார்த்த ஞானமாம்

(இ-ம்.) எதிரிட்ட விடயஞானத்தை அறிவது அஞ்ஞானமெனவும் எதிரீடின்றித் தன்னைத் தானாய் அறிவது திரஞான மெனவும் கூறியவாறும். (33)

(அ-கை.) கலைவல்லோரானும் பிரமத்தின் உண்மைநிலை அறியப்படாதெனல்.

கவி.

நவிலுகலை யறுபத்து நாலுமறி வாரும்
பவலயம தறுசுத்த பரமமறி யாரே.

(இதன் பொருள்.)

நவிலு —சொல்லப்பட்ட
கலையறுபத்து நாலும் } அறுபத்துநான்கு கலை ஞானங்களையும்
அறிவாரும் —தெரிந்தபேர்களும்
பவலயமதற —உற்பத்திநாசமில்லாத
சுத்தபரம மறியார் } சுத்தப்பிரமத்தையறிய மாட்டார்கள்



(இ-ம்.) எல்லாம் தெரிந்துகொண்டு தன்னைத் தெரிந்துகொள்ளாமையால் இதுவும் விடயஞானமே அன்றிப் பரஞானம் அன்றென்பதாம். (34)

(அ-கை.) ஞானஞ்ஞான தசையிற் புலப்படாததும் புலப்படுவதும் இனையவெனக் கூறல்.

கவி.

ஆகவறி வாளரறி வாரிவை யனைத்து
மேகவறி வாளரிவை யாவுமறி யாரே.

இதன் பொருள்.

ஆகவறி வாளர் } தேகோகமென்னும் விடய ஞானிகள்
அறிவாரிவை யனைத்தும் } இங்ஙன மதுவிதுவெனச் சுட்டத் தகுவனவனைத்தையும் அறிவார்கள்
ஏகவறிவாளர்—பூரணஞானமுடையோர்
இவையாவு மறியார் } சுட்டுப்பொருளாகிய இவை யனைத்தையுமறியமாட்டார்கள்

(இ-ம்.) ஞானஞ்ஞானத்தின் தன்மை இஃதெனத் தெரிவித்ததாம். (35)

(அ-கை.) பரஞானத்தை நீக்கித் திர ஞானத்தை நிரூபித்தல்.

**கவி.**

ஐயறி வறிந்தவை யடங்கினவ ரேனு
மெய்யறிவி லாதவர்கள் வீடதுபெ றுரே.

(இதன் பொருள்.)

ஐயறிவு —பஞ்சேந்திரியமென்னுமுணர்வை
அறிந்து —உள்ளவாறு இவற்றின்இயல்பால்
அவை —அப்பஞ்சவுணர்வு [தெரிந்து
அடங்கினவரேனும் } தம்முள்நசிக்கக்கற்றஞானிகளாயினும் [னமில்லாதவர்கள்
மெய்யறிவிலாதவர்கள்—ஐக்கியமான திரஞா
வீடதுபெருர்—முத்தியடையார்கள்.

(இ-ம்.) கூடத்த பிரமமென்னும் பேத நீங்கிச் சுயமாய் விளங்கு ஞானமே வஸ்துவா



தலின் அதனைத் திரஞானமெனக் கூறினர் என்பதாம். (36)

(அ.கை.) முன்னர் பரஞானம் அபர ஞானம் என்ற இரண்டையும் நீக்கித் திரஞா னம் ஆவது இனையதெனக் கூறல்.

**கவி.**

பூசனையு மதுசகல பொருளுமறி தமையு
மீசனையும் வேறதற வறிவதறி வெனலே.

(இதன் பொருள்.)

பூசனையும் —ஆராதித்தலையும்
அதுசகல பொருளும் } அதற்கு வேண்டிய சகல தேனுதிய திரவியங்களையும்
அறிதமையும் } சிவத்தைத்தியானிக்கின்ற ஆன்மாவாகிய தம்மையும்
ஈசனையும் } ஆராதித்தலை ஏற்கத்தக்க சிவத்தையும்
வேறதற —பேதமின்றி

அறிவது —தானாய் விளங்குவது [வதாம்
அறிவெனல்—சுயஞ்ஞைசதன்னியமெனப்படு

(இ-ம்.) அது இது என்னுஞ் சுட்டின்றி யாவும் தன் மயமாய் விளங்குவதே திரஞான மென்பதாம். (37)

(அ-கை.) முற்கூறிய ஞானத்தையே வற்புறுத்திக் கூறுதல்.

கவி.

மெய்ம்மையறி வல்லதமில்
வேறறிவ தெல்லாந்
தம்மையறி யும்மறிவ
தேயறிவு தானே.

(இதன் பொருள்.)

தமில் —தமக்கு [யாவும்
வேறறிவதெல்லாம் —புறம்பாயறியப்பட்ட
மெய்ம்மையறிவல்ல —சுயஞ்சித்தல்ல
தம்மையறியும்—தன்னைத்தானயறிகின்ற
அறிவதே —அந்தத்திரஞானமே
அறிவுதான் —தானாகிய ஞானமாம்



மெய்பறிவு அல்ல என்றது மித்தையான அஞ்ஞானத்தை.

(இ-ம்.) சர்வம் பிரமமயம் இஃதவைஅன் றென்னும் பிரமோபதேசப்படி சிவேசுர கூடத்தப் பிரமாதியான சகலத்தையும் நீக்கிச் சேடித்துநின்ற ஞானமே தன்மயஞானம் என உபதேசித்தார் என்பதாம். (38)

(அ-கை.) 'தம்மையறியும் மறிவதே யறிவு தானே' என்றதைக் கேட்ட மாணாக்கன் இஃதுண்மையாயின் எல்லாரும் தன்னைத் தானறிந்தவர்களாகவேண்டுமே, அறிந்தவர் களாயின் சுகதுக்கத்திற் பரதபித்துக்கொண்டு சரிதாதி சற்கிருத்தியங்களை ஊணுறக்கங் களிற் சிரத்தையின்றி அரிய தவத்தால் மெலிந்து இயற்றுவானேன்? இயற்றுதலின் இவ்வுடலைத் தானெனல் ஞானம் அன்றாகை யின் தானென்பதற்குப் பொருள் வேறுண்டு

போல் தோற்றுகின்றது. இவ் ஐயத்தை அகற்றவேண்டுமெனக் கேட்டல்.

கவி.

தானெனு முடம்பிது
தனைத்தவிர வேரு
யானெனு மருத்தமுள
வோவருளு கெனவே.

(இதன் பொருள்.)

தானெனும்—யாவருந்தானென்றுசொல்லும்
உடம்பிதுதனைத்தவிர-இத்தேகத்தையன்றி
வேருய் —வேருக
யானெனும்—தானென்கிற
அருத்தமுளவோ—பொருளுண்டோ
அருளுகென—அனுக்கிரகஞ்செய்யவேண்டு மெனச் சீடனிரந்துகேட்க

(இ-ம்.) தனக்கு அநுபவமாயுள்ள தூல தேகத்தை அன்றித் தானென்பதற்குப்



பொருள் வேறு கண்டிலன், உளதாயின் இருக்கக் காட்டவேண்டும் என்பதாம். (39)

(அ-கை.) அதற்கு ஆசிரியர் அருத்தம் வேறுண்டெனத் தோன்ற இதனைக் களை வான் வேண்டி இத்தூலதேகம் கிழமை, அசேதனம், அகர்த்தத்துவம், அசுத்தம், சடம், போலியியக்கம், அன்னியம், பௌதிகம் என்னும் இக்குணங்களைஎற்கப்பாலது என்றுணர இக்கவியில் கிழமையாங்குணம் உணர்த்தல்.

கவி—வேறு.

எனதாடை பொன்பூ
மகன்றையல் பாய்மா
விபங்கண் முகங்கால்கை
மெய்யென்ன வென்றுங்

தனதா யுரைப்பான்
வகுத்திந்த வூனத்
தானென் றயர்த்துஞ்
சொலத்தக்க தன்றே

(இதன் பொருள்.)

எனது ஆடை —என்னுடைய வஸ்திரம்
பொன் பூ மகன்—தனம் நிலம் புத்திரன்
தையல் பாய்மா இபம் } பெண்சாதி தாவுகின்ற குதிரை யானை
கண் முகம் கால் கை மெய் } கண்கள் முகம் கால்கள் கைகள் உடம்பு
என்ன வகுத்து—என்று வேறுபிரித்து
என்றும் —எப்போதும்
தனதாயுரைப்பான் } ஒருவன் தன்னுடையதாகச் சொல்லுவான் (ஆதலின்)
இந்தவூனே —இந்த மாமிச உடலை
தானென்று அயர்த்தும் —தானாகமறந்தும்
சொலத்தக்கதன்று—சொல்லத்தக்கதல்ல



ஆடையாதியிபமீறு—பிறிதின்கிழமை.
கண்ணாதிமெய்யீறு—தற்கிழமை.

(இ-ம்.) எனவெனப்படுதெவின் இத்தேகம் தான் அன்றென்பதாம். (40)

(அ-கை.) அசேதனமாங் குணமுணர்த்தல்.

**கவி.**

தாளாக வூராழி யார்வெங்கில் வீணைத்
தண்டாக வன்மார்பு தட்டாகமொட்டா
நாளாமலர்ச்சென்னி கூந்தற்கொடித்தேர்
நாணளுமூர்வானின் வேறாக நாடே.

(இதன் பொருள்.)

தாள் —கால்கள்
ஊராழியாக—ஊருஞ் சக்கரமாகவும்
வெங்கில் —முதுகிலுள்ள
வீணைத்தண்டு—முதுகெலும்பு
ஆராக —ஜர்தருவாணியாகவும்

வன்மார்பு —வலியமார்பானது
தட்டாக —பீடமாகவும் [ன்ற
நாளாமலர் —அன்றலருந் தாமரைமலர்போ
சென்னி —சிரசு [சிகரமாகவும்
மொட்டா —தாமரை அரும்பு போன்ற
கூந்தல் —சிரமயிர்
கொடி —கொடியாகவும் இருத்தலின்
தேர் —இத்தேக ரதமானது
நாளுளும் —அனுதினமும்
ஊர்வானின்—நடத்துவோனுக்கு
வேறுகாடு —அன்னியமாகக்காணுதி

இவ் அங்கங்களால் தேருக்கு ஒத்து நிற்றலின் இவ்வுடலைத் தேரெனவும், ரதாரூடனுக்கு ரதம்போன்று ஆன்மாவுக்கு உடல் அன்னியமாக நிற்றலின் ஊர்வானின் வேர் எனவுங் கூறினார். கூறவே இத்தேகம்அருத்தாபத்தியால் சேதனமென்பது பெற்றாம்.

(இ-ம்.) தேகம் அசேதனம் எனவும் தேகி சேதனன் எனவும் கூறியதாம். (41)



(அ-கை) அகர்த்தத்துவமாங் குணம் உணர்த்தல்.

கவி.

கடக்குஞ்சரம்பண்ணி யுண்ணின்றொருத்தன்
கைபாதகன்னங்கள் மெய்போலியக்குங்
கிடக்குங் நடத்தா விடத்திவ் வுடம்புங்
கிடக்கும்மொருத்தன்னடத்தாவிடத்தே

(இதன் பொருள்.)

கடக்குஞ்சரம் பண்ணி } மூங்கில் முதலியவற்றால் மதயானைபோலச்செய்து
உண்ணின் றொருத்தன் } ஒருவன் உள்ளே புகுந்து கொண்டு
கை —தும்பிக்கையையும்
பாதம் —கால்களையும்
கன்னங்கள் —காதுகளையும்
மெய்போல் —நிசம்போல
இயக்கும் —அசைப்பன்
நடத்தாவிடத்து—அவனசைக்காதபோது

கிடக்கும்—அதுவறிதிருக்கும் (அதுபோல)
இவ்வுடம்பும்—இத்தேகமும்
ஒருத்தன் —ஒரு புருடன்
நடத்தாவிடத்து—அசைக்காதபோது [கும்
கிடக்கும்—சவமாகப் பூமியில் விழுந்துகிடக்

இதனால் அசைவாதிகட்குப் போலியானே போன்று வசனாதிகட்கு இத்தூலவுடல் கர்த்தத்துவம் அன்றென்பது பெற்றும்.

(இ-ம்.) எல்லாச் சேட்டைகட்கும் கர்த்தத்துவம் தேகியே அன்றித் தேகம் அன்று என்பதாம். (42)

(அ-கை.) அசுத்தமாங் குணமுணர்த்தல்.

**கவி.**

ஒருகூறு மனமாகு மொறுகூறு மலமாகு
மொருகூறுடம்பாகு மூண்டற்ற வன்ன
மிருகூறு நீயாகி லொருகூறு நீயா
மிழிக்கும் மலஞ்சோ ரிடப்பட்டதுடலே.



(இதன் பொருள்.)

உண்டற்ற வன்னம் } புசித்துச்சீரணிக்கப்பெற்ற ஆகாரமானது
ஒருகூறு —ஒரு பங்கு
மனமாகும்—மனமாகப் பிலக்கும்
ஒருகூறு —ஒரு பங்கு
மலமாகும் —மலமாக நீங்கும்
ஒருகூறு —ஒருபங்கு
உடம்பாகும்—தேகமாகப் பருக்கும்
இருகூறு —இவற்றுள் இரண்டு பங்கு
நீயாகில் —நீயானல்
ஒருகூறு நீயாம் } மற்றொருபங்கு நீயாவை (அது நீயாகத்தக்கதன்று)
இழிக்கும் —யாவரானும் அருவருக்கத்தக்க
மலம் —அமேத்தியம் [பட்டது
சோரிடப்பட்டது —கசிந்துகொண்டிருக்கப்
உடல் —தூலவுடலாதலின்

(இ-ம்.) தூலவுடல் நானென்பதைக் களைவான் வேண்டி இங்ஙனங்கூறினார்என்பதாம்.

(அ-கை.) சடமாங் குணமுணர்த்தல்.

கவி.

கிளரா தரத்துண்ணு மன்னஞ் சுடக்கை
கிட்டப் பொருதே யிருந்தார் கிடந்தார்
தளரா துறப்பொன்று முயிர்போக வன்றே
தளற்பள்ளி மீதே துயின்றார் சகித்தே.

(இதன் பொருள்.)

கிளர் ஆதரத்து—மிகுந்த ஆசையினால்
உண்ணும் —புசிக்கின்ற
அன்னஞ்சுட —அன்னமானது சுட
கை —கையானது
கிட்ட —அவ்வன்னத்திற்குச்சமீபிக்க
பொருதே —சகிக்காமலே
இருந்தார் —இருந்தவர்கள்
கிடந்தார் —படுக்கையானவர்களாய்
தளராதுறப் பொன்றும் } அவயவங்களில் ஒன்றும் குறையாமல்



உயிர்போக —உயிர்நீங்க
அன்றே —அக்கணமே
தளற்பள்ளிமீதே—அக்கினிமெத்தையில்
துயின்றார் சகித்தே } சகித்து நித்திரை செய்தார்கள்

(இ-ம்.) அக்கினியின் உஷ்ணசத்தியைஉண ரற்பாலது இவ்வுடம்பு அன்றென்பதாம்.

(அ-கை.) போலி யியக்கமாங் குணம் உணர்த்தல்.

கவி.

நிழற்பாவை கண்ணாடி
யிற்பாவை கைகா
ணிமிர்க்கு முடக்கு
மிவன்செய்யு மெல்லாத்
தொழிற்பா லவாமற்றிவ்
வுடலஞ் செய்தொழிலுஞ்
சுடர்ஞான வடிவான
வன்செய்த தொழிலே.

(இதன் பொருள்.)

நிழற் பாவை } ரவியாதியாற் காணப்பட்ட தேகச்சாயையும்
கண்ணுடி யிற்பாவை } ஆடியிற் காணப்படும் தேகச்சாயையும்
கைகால் —அத்த பாதங்களை
நிமிர்க்குமுடக்கும்—நீட்டு முடக்கும் (இவை யெல்லாம்)
இவன்—இம்மனிதன்
செய்யும் —செய்கின்ற
எல்லாத் தொழிற் பாலவாம் } சமஸ்த கிரியா வண்ணமாம் (அதுபோல)
இவ்வுடலஞ்செய் தொழிலும் } இத்தேகம் செய்யும் கிரியைகளும்
சுடர் —சதோதயமாகப் பிரகாசிக்கின்ற
ஞானவடி வானவன் } ஞான சொரூபியான வாத்மாவாம்
செய்ததொழிலே—செய்யுந் தொழில்களே

(இ-ம்.) தேகியினது இயக்கம் இத்தேகத்ததாகத் தோற்றும் என்பதாம். (45)



(அ-கை.) அன்னியமாங்குணம் உணர்த்தல்

கவி.

அறிகின்ற பொருளென்று
மறிவானின் வேறே
யானலிவ் வூனரை
நாமென்ன லாமோ
செறிகின்ற புள்ளல்ல
வேகூடிவ் வகையே
செடமான வுடனின்னில்
வேறென்று தெளியே.

(இதன் பொருள்.)

அறிகின்ற பொருள் } அறியப்படும் வஸ்துக்கள்
என்றும் —எப்போதும்
அறிவானில் —அறிபவனுக்கு
வேறேயானல்—புறமாகவே இருக்குமானல்
இவ்வூனரை—இம்மாமிச நிறைந்ததேகத்தை

நானென்ன லாமோ } நானென்று சொல்லலாமோ
செறிகின்றபுள் ளல்லவே கூடு } அடைந்திருக்கின்ற பட்சி அல்லவே கூண்டானது
இவ்வகையே —இவ்விதமாகவே
சேடமானவுடல்—சடவடிவமான இத்தேகம்
நின்னில் —தானுன உனக்கு
வேறென்று தெளி } அன்னியம் என்று தெளிந்து கொள்வாய்

(இ-ம்.) ஆத்மாவே தான் என்பதை அறிவித்ததாம்.

(46)

(அ-கை.) இத்தேகம் பௌதிகமாந் தன்மை உணர்த்தல்.

கவி.

நிலமாகும்வற்பென்ற னெகிழ்கின்றனீரா
நெருப்பாமிதிற்சுட்ட வெல்லாமுமனில
சலமானபுரையானவானிந்தவுடலஞ் [ஞ்
சடமான வைம்பூத வுருவங்க டாமே.



(இதன் பொருள்.)

நிலமாகும் வற்பென்றல் } கடினமென்றதுபிருதுவியாம் [யது அப்புவாம்
நெகிழ்கின்ற னீராம்—நெகிழ்ச்சியையுடை
இதிற்சுட்ட வெல்லாமும் } யாவற்றையும் எரிக்கும் தொழிலை உடைய இது
நெருப்பாம் —அக்கினியாம்
அனிலஞ் சலமான—சலிப்பை உடையது
புரையானவான்—புரையையுடையது ஆகாய
இந்தவுடலம் —இத்தேகமும் [மாம்
சடமான —சடத்தன்மையான
ஐம்பூத உருவங்கள் தாமே } பஞ்சபூதங்களிலேகதேசமாயுண்டானவடிவங்களாம்

(இ-ம்.) பஞ்சபூத காரியமான தூலதேகம் சடமாதலின் தானல்ல எனநீக்கினதாம்.

(அ-கை.) இவ் ஏதுக்களால் தூலதேகம் தானன்று என அங்கிகரித்து இதனை அறியும் கண்ணாதிய ஞானேந்திரியங்கள் தானுக

வேண்டுமெனக் கருதிய சீடனை நோக்கி அவைகளும் தானல்லவெனக் களைதல்.

கவி.

விழியைப்புமானென்னில் ரவியாதியாலே
விளக்கஞ்செயுமற்ற வுருவத்தையற்றே
லொழியப் படுங்கன்ன முதனுலுமவனன்
றுருக்கண்டகண்டன்னையொப்பாகவுன்னே.

(இதன் பொருள்.)

விழியைப் புமானென்னில் — இத் தூலதேகத்தை அறியும் கண்ணை ஆன்மா எனக்கொள்ளில்
ரவியாதியால் — சோமசூரியாக்கினியினல்
மற்ற உருவத்தை — கண் தவிர மற்ற உருவங்
விளக்கஞ்செயும் — விளக்குவிக்கும் [களை
அற்றேல் — அத்தன்மைத்தாயின்
ஒழியப்படும் — அது நீங்கலாகிய
கன்னமுதனுலும் — சுரோத்திரமுதலி நான்குமோ



அவனன்று — அவ்வாத்மாவல்ல
உருக்கண்ட கண்டன்னை — உருவத்தை அறிந்த கண்ணை [வாய்
ஒப்பாகவுன்னே — சமாதானமாகக்கருது

(இ-ம்.) இவ் ஏதுக்களால் சுரோத்திராதிய ஞானேந்திரியம் ஐந்தும் தான் அன்றென்பதாம். (48)

(அ.கை.) முன் ஞானேந்திரியம் தானல்ல என்றபடி கன்மேந்திரியமும் தான் அன்றெனக் களைதல்.

கவி—வேறு.

அழலுண்பொருள் களிலுண்பவை
முக்கூறதின் முற்கூ
றணியென்புநடுக்கூறதுமச்சைக்
கிடனாது
மெழில்கொண்ட கடைக்கூறதுவாக்கா
யெழுமென்றே
யியனுன்மறை யந்தங்க ளிசைக்கின்றன
வாமே.

(இதன் பொருள்.)

உண்பொருள்களில்—உண்ணத்தக்க வைக [ளில்
அழல் —உதராக்கினியினால்
உண்பவை—சீரணித்த சாரமானவை
முக்கூறு —மூன்று பங்காம் [கு
அதின்முற்கூறு—அச்சாரங்களில் முதற்பங்
அணியென்பு —தரிக்கப்பட்ட அஸ்தியாம்
நடுக்கூறது —நடுப்பங்கானது
மச்சைக்கிடனாகும்--மாமிசத்துக்காதாரமாம்
எழில்கொண்ட—அழகிய
கடைக்கூறது —கடைப்பங்கானது
வாக்காயெழுமென்று } வாக்கிந்திரியமாமென்று
இயனான் மறை அந்தங்கள் } இயல்பாயுள்ள நான்கு வேதங்களின் முடிவாகிய உபநிடதங்கள்
இசைக்கின்றனவாம்-சொல்லுகின்றனவாம்.

எனவே, பிருதிவியின் அமிசமாகி உணவின் சார ஆசாரமாத் தடித்தது எலும்பு,



மாமிசம், வாக்கிந்திரியமாதலின் கன்மேந்திரியம் ஐந்தனுள் பிரதமையாயுள்ள வாக்கிந்திரியந் தானாகா விடத்து மற்றைய நான்கும் தான் அன்றெனக் குறிப்பிக்கப் பெற்றும். சாரமாகிய காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

(இ-ம்.) இவ் ஏதுக்களால் கன்மேந்திரியமும் தான் அன்றென்பதாம். (49)

(அ-கை.) முன்னர்ப் புறக்கரண நிக்கிரகஞ் செய்தபடி அகக்கரணங்களை நியதிகளையத் தொடங்கி அவற்றிற் பிராணவாயுவை நியதிகளைதல்.

கவி.

உண்ணும்புனல் முக்கூறதின்
முற்கூறுவர் நீரா
முதிரங்கடு விற்கூறு
கடைக்கூறு பிராண

னெண்ணும்பிதி லிருகூறவை
நீயாயிடி னன்றோ
விறுகின்ற பிராணன்னது
நீயாகுவ திசையே.

(இதன் பொருள்.)

உண்ணும்புனல்—பானஞ்செய்யுஞ் சலாகாரம்
முக்கூறு —மூன்று பங்காம்
அதின்முற்கூறு—அவற்றின்முதற்பங்கு
உவர்நீராம் —மூத்திரமாம்
நடுவிற்கூறு —நடுப்பங்கு
உதிரமீ —இரத்தமாம்
கடைக்கூறு —கடைப்பங்கு
பிராணன் —பிராணவாயுவாம் [ன்றனுள்
எண்ணும்பிதில்—எண்ணிக்கையுள்ள விம்மூ
இருகூறவை —இரண்டுபங்காயவை
நீயாயிடினன்றோ—நீயானலல்லவா
இறுகின்ற —நசிக்கின்ற
பிராணன்னது —பிராணவாயுவானது



நீயாகுவது —நீயாகவேண்டுவது
இசை —இதனைச்சொல்லுதி

இதுவும் காரியத்தைக் காரணமாக உப சரித்தல். (50)

(அ:கை.) இந்திரியம் அடங்கிய இடத்தும் பிராணன் இருக்கைக்கு ஏது கூறல்.

கவி—வேறு.

பிராணனுமல்லதுஞ்சி லுணர்வின்மைபா
துணரும் புலன்களொழிவாற் [ல
பிராணனதென்னேமன்னே யொழியாது
நகர்சூழ்வலஞ்செய்பொழுதே.[சேனே

(இதன் பொருள்.)

துஞ்சிலுணர் வின்மையால் } நித்திரையில் அறிதற் றன்மை இல்லாததிஞலும்
அது —அந்தப்பிராணவாயு
உணரும் புலன்கள் } விடயங்களை அறியும் இந்திரிய சம்பந்தம்

ஒழிவால் —விட்டிருப்பதினாலும்

பிராணனு மல்ல } பிராணவாயுவுந்தானல்ல (ஆயின்)

பிராணன தென்னை } பிராணவாயுவினியக்கமே யெனின் [னை

மன்னை—கூடாரத்தி னித்திரைசெய்யு மரச

ஒழியாது —விட்டுநீங்காமல்

சேனை நகர் —சேனைகள் பட்டணத்தை

சூழ்வலம் செய் பொழுது } காவலாகச் சுற்றிவரும் அவசரத்தைப்போலும்

எனவே, அரசன்இருக்கும் இடத்தைச் சேனை காப்பதுபோல் ஆன்மா இருக்கும் இடத்தைப் பிராணன் காக்கின்றது எனவும், உணரும் புலன்கள் ஒழிவால் என்பதினால் சொப்பனாவத்தை எனவும் பெற்றாம். (51)

(அ-கை.) அந்தக்கரணம் அடங்கிய இடத்தும் பிராணன் இருக்கைக்கு ஏது கூறல்.



கவி.

கரண மொடுங்கவாயு நிகழ்வென்கொலெ
னுடல்காவ லாகு மிலதேன் [னின்
மரண மடைந்ததென்று தமர்சுட் டிடா
வளைவாலின் ஞாளி கொளுமே. [முன்

(இதன் பொருள்.)

கரணம்ஒடுங்க—கரணங்கள் அடங்கினஇடத் [தும்

வாயு —பிராணவாயு

நிகழ் வென்கொ லென்னில் } சலிப்பதற் கேதென்னை யெனில்

உடல்காவ லாகும் } தான்வசிக்கின்ற தேகத்திற் குக் காவலாகும்

இலதேல் —அக்காவல் இல்லையாயின்

மரணமடைந்த தென்று } ஆன்மா நீங்கிவிட்ட தென்று

தமர் சுட்டிடா முன் } பந்துக்கள் தகனம் செய்வ தற்கு முன்னமே

வளைவாலின் —வளைந்த வாலையுடைய

ஞாளிகொளும்—நாயுட்கொள்ளும்

சேவகன் அரசனைவிட்டு நீங்காததுபோல் பிராணனுஞ் சீவனைவிட்டு நீங்காதெனவும், கரணமொடுங்க என்பதினாற் சுழுத்தியவத்தையெனவும் கொள்க.

(இ-ம்.) பிராணாதி வாயுக்களும் தான் அல்லவென நியதிகளைந்ததாம். (52)

(அ-கை.) முன் பிராணாதிகளைநீக்கின மாத்திரத்தில் அவற்றைப்பிரேரகஞ்செய்யும் அனாதி அந்தக்கரணங்களைத் தான் என்றசீடனை நோக்கி அவையும் அன்றெனக் கூறுவான் தொடங்கி மனம் புத்தி இரண்டும் நீ அன்றெனக் களைதல்.

கவி.

இனமுற வெண்ணவுள்ள கரணத்தி னொ
 தெனலா லிதென்ன தெனலான் [ன்றி
மனமுன மன்னமென்ற வதனாலு மல்ல
 மதியல்ல வந்த வகையே.



(இதன் பொருள்.)

இனமுற வெண்ணவுள்ள — சமட்டியென்றுன்னத் தக்க
கரணத்தின் — அந்தக்கரணங்களில்
ஒன்றிதெனலால் — ஈதொன்று என்பதினாலும்
இதென்னதெனலால் — என் மனது என்றதினாலும்
மனமுனமன்னம் என்றவதனாலும் — முன்னமேமனது அன்னசாரமென்றதனாலும்
அல்ல — மனமுந்தானல்ல
அந்தவகையே — அவ்வாறே
மதியல்ல — புத்தியுந்தானல்ல

சாமானியத்தால் எவ்வுயிர்க்கரணங்களும் ஓரினமாகும் ஒருமைபற்றிச் சமட்டியாதலின் இனமுறவெண்ணவுள்ள கரணத்தின் எனவும், விசேடத்தால் தனித்தனி அவ்வவ் உயிர்க்கரணம் அச்சமட்டியின் ஏகதேச வியட்டியாதலின் 'ஒன்றிதெனலாலெனவும்'

தானொரு முதலாகாது ஒன்றிற்குக் கிழமை
யாக நிற்றலின் 'இதென்னதெனலா லென
வுங்கூறினர். முன்னர் "எனதாடை பொன்பூ
மகன் றையல் பாய்மா" என்ற கவியில் தூல
தேகத்தை எனதென்றது பிறிதின் கிழமை
யும் இக்கவியில் மனதை எனதென்றது தற்
கிழமையுமாமென்க.

(இ-ம்.) மனதையும் அதன் சம்பந்தமான
புத்தியையும் தானல்லவென நியதிகளைந்த
தாம். (53)

(அ-கை.) அகங்காரமும் தான் அன்றென
நிரூபித்தல்.

கவி—வேறு.

இடரின் புளதாய் நிலைபற் றறிவற்
றெண் ணுங்கர ணங்க ளிலாயெவரு
மடரும் பிறவிக் கடியென் றுணரு
மகங்காரமு நீயல வென்றறிபே.



(இதன் பொருள்.)

இடரின்புளதாய்—துன்பமே இன்பமாகவும்
நிலையற்று —நிலையில்லாமல்
அறிவற்று —தன்னையறியு முணர்விழந்து
எண்ணுங்கரணங்களிலாய் } நானெனவெண்ணு மந்தக் கரணங்களி லொன்றாகவும்
அடரும்பிறவிக்கு—நெருங்கியசன்மங்களுக்கு
எவரும் —யாவரும்
அடிஎன்றுணரும்—மூலமாகவுமுணரத்தக்க
அகங்காரமும் —அகங்காரமும்
நீயலவென்றறி } உனதெதார்த்த சொரூபமல்ல வென்றறிதி

(இ-ம்.) விஷயங்களை நான் என்ற அபி
மானிக்கும் அகங்காரமும் தானல்லவென
நீக்கியதாம். (54)

(அ-கை.) சித்தமும் தான் அன்றெனக்
கூறுதல்.

கவி.

ஐயப் படலோர் பொருணிச் சயமா
யறியப்பட லியானென தென்றுமதஞ்
செய்யப் படல்செய் வதுசிந் தனையாஞ்
சித்தம்மது வன்றென நீ தெளியே.

(இதன் பொருள்.)

ஓர் பொருள் —ஒரு பொருளை
ஐயப்படல் —மனதினுற் சம்சயித்தலும்
நிச்சயமாய் அறியப்படல் } புத்தியினுல்நிச்சயித்தறிதலும்
யானெனதென்று—அகங்கார மமகாரமாக
மதஞ்செய்யப் படல் } மதங்கொள்ளுதலாகிய செயல்களை
செய்வது —செய்கின்றதிற்ருனே
சிந்தனையாம் —சிந்தனு வடிவமாயுள்ள
சித்தம் —சித்தமும்
அதுவன்றென—அவ்வான்மா வாகாதென்று
நீ தெளி —நீ தெளிந்து கொள்வாய்



(இ-ம்.) சித்தமும் தானல்ல என நீக்கியதாம். (55)

(அ-கை.) ஆலமுதலிய நான்கும் நீயல்ல வெனக் களைதல்.

கவி.

முன்னுக வுடம்பது சித்தமதே
முடிவாக மொழிந்த பொருட்டிரடா
னின்னுகில நீயறியும் பொருளாய்
நிகழ்கின்றத னுலென நின்மலனே.

(இதன் பொருள்.)

முன்னுகவுடம்பது —தேகமானதாதியாக
சித்தமதேமுடிவாக—சித்தமானதீருக
மொழிந்த —சொல்லிய
பொருட்டிரடான் —விடயசமுகங்கள்
நீயறியும் பொருளாய் } உன்னுலறியப்படும் பொருளாக
நிகழ்கின்றதனுல் —விளங்குகின்றதினுல்
நின்னுகில —உனதெதார்த்தவடிவமல்ல
என நின் மலன் } என்று மலரகிதரான குருமூர்த்தி சொல்ல

(இ-ம்.) ஸ்தூலசூக்குமங்களைத் தானல்லவென நீக்கினதாம். (56)

(அ-கை.) இங்ஙனம் அருளிச்செய்த ஆசிரியரை நோக்கி விருத்தி நீங்கின இடத்துள்ளது குனியமாதவின் இதுதானோ நானாகுவதென மாணாக்கன் வினாதல்.

**கவி.**

உன்னா லறியப் படுமியா வையுமுன் [க்
னுருவன்றென வோதினையொக்குமென
கென்னா லறியா தொழியும் பொருளோ
யானாகுவ தென்றன னென்றலுமே.

(இதன் பொருள்.)

உன்னாலறியப்படும்—உன்னாலறியப்பட்ட
யாவையும் —சகல வஸ்துக்களும்
உன்னுரு வன்றென—உனதுசொரூப மல்ல
ஓதினை —உரைத்தீர் [வென்று
ஒக்குமெனக்கு } என்னனுபவத்திற்கு ஒத்து இருக்கின்றது



என்னாலறியாது—என்னாலறியப்படாமல்
ஒழியும்பொருளோ } ஒழிந்திருக்குஞ் சூனியமாகிய காரண சரீரமோ
யானாகுவது —நானெனப்படுவது
என்றனன்—என்று மாணாக்கன் வினவினன்
என்றலும் —என்று வினாவலும்

(இ-ம்.) அறிபடும் பொருளனைத்தும் தானல்லவென்று அதனால்அறியப்படாத சூனியம் தரிசனமாயிற்று என்பதாம். (57)

(அ-கை.) அறியாமையாகிய காரண தேகமும் தானல்ல என நிரூபித்தல்.

**கவி.**

அறியாப் பொருள் காரண மாயைகுறித்
தறியும்பொருள் காரிய மாமுலகிந்
நெறியாற்றிகழ் நான்மறை யந்தமெலா
நீயன்றென வோது நிரந்தரமே.

(இதன் பொருள்.)

அறியாப்பொருள்—அறியப்படாதவஸ்து
காரணமாயை —மூலாஞ்ஞானமாம்
குறித்தறியும் பொருள் } இஃதெனக்குறித்து அறியப்படும் வஸ்து
காரியமாமுலகு —காரியமானசகத்தாம்
இந்நெறியால் —இம்மார்க்கத்தினல்
திகழ் நான் மறை } விளங்காநின்ற நான்கு வேதங்களின் [அனைத்தும்
அந்தமெலாம்—முடிவாயுள்ள உபநிடதங்கள்
நீயன் றென } இவ்வறிவறியாமை நீயல்ல வென்று [ தும் எடுத்துச்செல்லும்
ஓது நிரந்தரம்— இடைவிடாமல் எவ்விடத்

(இ-ம்.) அறியப்படும் ஆலசுக்குமத்தோடு அறியப்படாத காரணதேகத்தையும் நியதிகளைந்தார் என்பதாம். (58)

(அ-கை ) அங்ஙனங் களைந்த இடத்துத் தானுக விளங்குவதுஇனையதெனவும் அஃது இன்னதற்குப் புலப்படும் எனவும் கூறல்.



கவி.

அறியும்பொருளன் றறியாப் பொருளன்
றறிவாகிய நீயெனு மப்பொருடான்
பொறியின் வழிநின் றறியும் பொருளோ
போதக் கண்விழித் தறியும் பொருளே.

(இதன் பொருள்.)

அறிவாகிய—அறிவேவடிவாயுள்ள
நீயெனு மப் பொருடான் } நீ என்னும் அந்தத் துரியப் பொருளானது
அறியும்பொருளன்று—திருசியமுமல்ல
அறியாப்பொருளன்று—அதிருசியமுமல்ல (ஆயின் அஃது)
பொறியின் வழி நின்று } மனுதி ஐம்பொறி மார்க்கமாக நின்று
அறியும்பொருளோ—காணும் வஸ்துவோ
போதக்கண் விழித்தறி யும் பொருள் } அறிவாகியநேத்திரம்மலர்ந்து தானே தானய் அறியும் பர வஸ்துவாம்

அறியப்படுவது பிரதிபிம்போபாதியும் அறியப்படாதது அவிச்சின்னோபாதியும் ஆதலினானும், இவ்விரண்டு உபாதியும் தோற்றி மறைவதற்கு ஆதாரமாயும் அவற்றை அங்கங்கே யததுவா நின்றறிந்தும் அவை ஆகாததாயும் விளங்குவது சைதன்னியமாகிய அறிவாதலினானும் இவை யாவும் நின்பால் நிகழப்படுதலின் அவ்வறிவே நீ யாமென்றற்கு ஐயம் இன்றாதலினானும் இங்ஙனம் கூறப்பட்டது.

(இம்.) அத்துவித வஸ்துவே தான் எனத் தரிசிப்பித்ததாம்.

(59)

(அ-கை.) இதுபரியந்தம் அவத்தாத்திரயங்களான அறிவு அறியாமைகளை நியதிகளைந்து அவற்றிற்குஅதிட்டானமான துரிய வியாபகத்தையே வஸ்து என ஆசிரியர் உபதேசித்தபடி வேதப்பிரமாணமும் நிரூபிக்கத் தொடங்கல்.



கவி.

வேதப்பொரு டானிது வேறுசொலும்
வினையாவையு மன்றொரு வேறுமிலாப்
போதப்பொரு ளந்த மறைக்கணியாம்
புனிதப்பொருடத்தொமசிப்பொருளே.

(இதன் போருள்.)

வேதப்பொருடானிது — இதுவே வேத நிச்சயமாம்.

வேறு சொலும் — இதற்கு வேறாகச் சொல்லப்பட்ட

வினையாவையு மன்று — கன்மத்துக்கு ஈடாக வந்த சகலமத நிச்சயங்களுமல்ல

ஒருவேறு மிலா — கிஞ்சித்துந் தனக்கன்னியமென்பதில்லாத

போதப்பொருள் — ஞானவஸ்துவானது

அந்த மறைக் கணியாம் — அழகிய வேதத்தின் சிரோரத்தினமாக விளங்கும்

புனிதப்பொருள் — அந்தப்பரிசுத்தமானவஸ்து

தத்தொமசிப் பொருள் — சாமவேதத்தின் தத்துவமசி யென்னும் மகா வாக்கியத்தின் பொருளாம்

(இ-ம்.) அநாதியான சாமவேத மகாவாக்கியத்தைத் தனது உபதேசத்திற்குச் சகாயமாக நிரூபித்ததாம். (60)

(அகை.) மகாவாக்கியத்தின் பதப்பொருள் மூன்றையும் நிரூபித்தல்.

கவி—வேறு.

நிமலமாம்பர மதுவெ னும்பொரு
ணீயெனும் பொருள் சீவனே
யமலமான விரண்டி னயிக்கிய
மசிபதப் பொரு ளாவதே.

(இதன் பொருள்.)

அதுவெனும் பொருள் } முற்கூறிய மகா வாக்கியத்தின் முதற்பதமானதத்தென் பதன் பொருளானது

நிமலமாம்பரம்—நின்மலமான ஈசுரனும்

நீ யெனும் பொருள் } இரண்டாம்பதமான துவமென் பதன் பொருள்



சீவனே —சீவனும்

அமலமான—களங்கமற்ற [யமே

இரண்டினயிக்கியம் —பிரமகூடத்தவயிக்கி

அசிபதப்பொருளாவது } மூன்றும்பதமான அசிபதத்தின் அருத்தமாம்

(இ-ம்.) தத்துவமசி என்னும் மகாவாக்கியத்தின் தற்பதம் துவம்பதம் அசிபதம் என்னும் ஆரியபதத்தை அதுநீயானாய் எனத் தமிழ்ப்பதமாக்கிப் பிரமகூடத்த அயிக்கியம் என்பது அதன் முக்கியப் பொருளெனப் பகுத்துக் கூறினதாம் (61)

(அ-கை.) கூடத்தபிரமமென்னும் இரண்டும் ஒன்றாயவாறு எங்ஙனம் என வினாதல்.

கவி.

அருமை யாகிய பிரம முன்னிலை
யாகு மாருயிர் பின்னிலை
யிருமை யான விரண்டி னயிக்கிய
மெய்து மாறெவ னென்னவே.

(இதன் பொருள்.)

அருமையாகிய —அரிதான
பிரமம் —பிரமமானது
முன்னிலையாகும்—முதலிலுள்ளதாம்
ஆருயிர் —நிறைந்த கூடத்தன்
பின்னிலை —பின்னுள்ளதாம்
இருமையான —துவிதமான
இரண்டின் —இவ்விரண்டினது
அயிக்கியம் —அயிக்கியமானது
எய்துமாறு —அடையும் வகை
எவனென்ன —எவ்வண்ணம்எனக்கேட்க

(இ-ம்.) இரண்டின் ஐக்கியம் என்றது; பிரமம் கூடத்தனிலா? கூடத்தன் பிரமத்திலா? இங்ஙனம் இரண்டானது எங்ஙனம் ஒன்றுபடும்? அங்ஙனம் ஒன்றுபடினும் கலவாதே? கலவாவிடின் ஒருபோது பிரிந்து வருமே? அங்ஙனம் பிரியின் ஐக்கியம் ஆயிற்றென்பது கூடாதே? ஆகலால் அதன்



உண்மை தெரிவிக்கவேண்டுமென வினவினதாம். (62)

(அ-கை.) சீவேசுரபேதம் உபாதியால் என்வும் அவ்வுபாதிகளில் சீவனுக்கு இனையதெனவுங் கூறல்.

கவி.

உபாதி யால்வரு பேத மேயிவர்
பேத மொன்றுறு முயிரினின்
கபாதி யாமுடல் போலி றைக்குள
கார ணாதிகள் காயமே.

(இதன் பொருள்.)

உபாதியால்—காரணகாரியோபாதியினால்
வருபேதமே—வாாநின்ற பேதமே
இவர்பேதம்—இச்சீவேசுரபேதமாம்
ஒன்றுறுமுயிரினின் } இப் பேதமடைந்த சீவனுடைய
கபாதியாமுடல்போல் } கபவடிவமான அலமுதலிய வேழைப்போல

இறைக்குள—ஈசுரனுக்குள்ள
காரணாதிகள் } சர்வகாரணன்முதலிய ஏழும்
காயம் } மூன்று தேகமாம்

சீவனுக்கு ஏழாவன:—தூலம்-க, இந்திரியம்-க, கரணம்-ச, பிராணன்-க ஆகிய ஏழும் மூன்று சரீரமாம். இப் பிரதிபிம்பம் மாயையிலும் அவித்தையிலும்எனக்கொள்க. கபமென்றதைத் தூலமென்றது காரணவாகு பெயர்.

(இ-ம்.) சீவஉபாதியை வகுத்துக் கூறி ஈசுர உபாதியைத் தொகுத்துக்கூறியதாம்.

(அ-கை.) ஈசுரனுபாதி ஏழையும் நிருபித்தல்.

கவி.

ஈசன் முற்றறி வான்வியாபி
யெவைக்கு மேது வியம்புமா
காச கன்னிருபாதி பாவனை
கார ணாதிக ளாவதே.



(இதன் பொருள்.)

ஈசன் —சர்வேசனெனவும்
முற்றறிவான்—சர்வஞ்ஞனெனவும்
வியாபி —சர்வாந்தரியாமியெனவும்
எவைக்குமேது—சர்வகாரணனெனவும்
இயம்பும் —சொல்லப்பட்ட
மாகாசகன் —சர்வதிதி எனவும்
நிருபாதி —சர்வசங்காரனெனவும்
பாவனை—சர்வ சிருட்டிஎனவுங் கூறியஏழும்
காரணாதி } காரண சரீர முதலிய மூன்று
களாவது } சரீரங்களாம்

யாவற்றிற்கும் மேலானவன் ஈசனென வும், யாவையும் அறிபவன் முற்றறிவானென வும், எவற்றினும் நிறைந்திருப்பவன் வியாபி எனவும், எவற்றிற்குங் காரணமானவன் எவைக்கும் ஏதுவெனவும், யாவையும் இரக்ஷிப்பவன் மாகாசகனெனவும், யாவையும் அழிப்பவன் நிருபாதி எனவும், யாவையும்

சிருட்டிப்பவன் பாவனை எனவும் கொள்ளுதல் அவசரம் பற்றி என்க.

(இ-ம்.) ஈசுரன்உபாதியை வகுத்துக் கூறினதாம். (64)

(அ-கை.) உபாதிகள் நீங்கும்படி அவற்றின். தன்மைகளை நிருபித்தல்.

கவி.

நீதி யாலிரு பாதி நீங்கிட
நீயெ னச்சொல் பதத்தினு
மாதி யாகிய தற்ப தத்து
மசுத்த சுத்த முரைத்துமே.

(இதன் பொருள்.)

நீதியால் —வேதங்கள் கூறிய ஒழுங்கின்படி

இருபாதி நீங்கிட } காரண காரிய உபாதிகள் நீங்கும் பொருட்டு

நீஎனச்சொல் பதத்தினும் } நீ எனப்படும் துவம்பதத்தினும்



ஆதியாகிய தற்பதத்தும் } முதற்கண்ணுள்ள தற்பதத்தினுமுள்ள

அசுத்தம் —அசுத்தோபாதியும்

சுத்தம் —சுத்தோபாதியும்

உரைத்தும் —சொல்லுவாம்

(இ-ம்.) ஜீவேசுர கற்பனை நீங்க அவற்றின் சுத்தாசுத்தங்களைக் கூறத்தொடங்கினாரென்பதாம். (65)

(அ-நை.) துவம்பதத்தின் சுத்தாசுத்த நிருபித்தல்.

கவி.

ஆக மூன்றிக ழேழு நானெனல்
தொம்ப தத்தி னசுத்தமே
சோக மின்றிய சான்று நானெனல்
தொம்ப தப்பொருள் சுத்தமே.

(இதன் பொருள்.)

ஆகமுன்றிகழ்—தேகமுதலாகவிளங்கிய [ல்
ஏழுநானெனல்-ஏழையுநானெனக்கொள்ளுத

தொம்பதத்தின் } துவம்பதார்த்தத்திற்கு
அசுத்தமே } அசுத்தோபாதியாம்
சோகமின்றிய —துக்கமில்லாத
சான்றுநானெனல்—சாட்சியே நானென்பது
தொம்பதப்பொருள் —துவம்பதார்த்தத்திற்
சுத்தம் —சுத்தோபாதியாம் [கு

(இ-ம்.) அசுத்த சுத்தமான சிவகூடத்த இலக்கணம தெரிவித்ததாம். (66)

(அ-கை.) தற்பதத்தின் சுத்தாசுத்த நிருபித்தல்.

கவி.

அகில காரண மாதி நானெனல்
தற்ப தத்தி னசுத்தமே
சகல காரண சான்று நானெனல்
தற்ப, தப்பொருள் சுத்தமே.

(இதன் பொருள்.)

அகிலகாரணமாதி—சர்வகாரணன் முதலிய
நானெனல்—நானென்பது [எழும்



தற்பதத்தி } தற்பதார்த்தத்திற்கு அசுத்
னசுத்தமே } தோபாதியாம்
சகலகாரணம்—சர்வகாரணாதி எழிற்கும்
சான்றுநானெனல்—சாட்சியே நானென்பது
தற்பதப்பொருள் } தற்பதார்த்தத்திற்குச்
சுத்தமே } சுத்தோபாதியாம்

(இ-ம்.) அசுத்த சுத்தமான ஈசுர பிரமத்தின் இலக்கணம் தெரிவித்ததாம். (67)

(அ-கை.) அசிபதார்த்த தரிசனம் தெரிவித்தல்.

கவி.

செறிந்த காரண காரியங்கள்
சிதைந்து மேலுறு சித்ததா
யறிந்த வாதனை தானு மற்றதவ்
வசிப தப்பொரு ளாவதே.

(இதன் பொருள்.)

செறிந்த —நெருங்கிய
காரண காரி } ஈசனது காரணோபாதியும்
யங்கள் } சீவனது காரியோபாதியும்

சிதைந்து —நசித்து [தாய்
மேலுறு சித்ததாய்—மேலுள்ள பிரமகூடத்
அறிந்தவாதனை } இவ்விரண்டாகத் தெரிந்த
தானும்அற்றது } வாசனையும்லயித்தது
அசிபதப்பொ } அசிபதத்தின் அருத்தமாம்
ருளாவது }

அசிபதத்திற்குக் கூடத்த பிரமமென்பது அசுத்தமும், அதுவேயிது இதுவேயது என்னும் அயிக்கியத்தில் அவ் விருவாசனை நீக்கமே சுத்தமுமாமென்க.

(இ-ம்.) சுருதிப் பிரமாணங் காரணமாகத் தானெனும் வஸ்து நிச்சயத்தைத் தரிசிப்பதாம். (68)

(அ-கை.) முற்கூறிய சுத்தா சுத்தங்களை முக்கிய இலக்கியமென நிரூபித்தல்.

கவி.

அசுத்த மாகிய திருப தத்தினு
முக்கி யப்பொரு ளாவதே



விசுத்த மான திலக்கி யப்பொரு
ளென்று சொல்லுவர் விமலரே.

(இதன் பொருள்.)

அசுத்தமாகியது—அசுத்தமெனப்படுவது
இருபதத்தினும்—இரண்டு பதங்களிலும் [ம்
முக்கியப் பொருளாவதே—முக்கியார்த்தமா
விசுத்தமானது—பரிசுத்தமெனப்படுவது
இலக்கியப்பொருள்—இலக்கியார்த்தமாம்
என்று சொல } என்று சத்துக்கள்
லுவர் விமலர் } சொல்லுவார்கள்

(இ-ம்.) அசுத்தம் முக்கியம் எனவும் சுத்தம் இலக்கியம் எனவும் கூறியதாம். (69)

(அ-கை.) அம்முக்கிய இலக்கியம் இனையவென நிரூபித்தல்.

கவி.

முரண்ட சிவ பரங்க டம்முடன்
முக்கி யப்பொரு ளாவதே

இரண்டில் வேறறு சிற்சொ ரூப
மிலக்கி யப்பொரு ளாவதே.

(இதன் பொருள்.)

முரண்ட —வேறுபாடான
சிவபரங்கடம் —சீவேசுரர்களுடைய
உடல் —சமட்டி வியட்டிதேகங்கள்
முக்கியப்பொருளாவது—முக்கியார்த்தமாம்
இரண்டில் —இவ்விரண்டுவின்கண்ணும்
வேறறு —வேற்றுமையின்றி விளங்கும்
சிற்சொரூபம்—கூடத்தப்பிரமம் [மாம்
இலக்கியப்பொருளாவது —இலக்கியார்த்த

(இ-ம்.) சீவேசர்கள் அவத்தாத்திரய சம்பந்தம் முக்கியம் எனவும் அச்சம்பந்தம் நீங்கின இடம் இலக்கியம் எனவும் கூறினதாம்.

(அ-கை.) இலக்கணவாக்கியப்படி உபாதிகளை நீக்கின இடத்துள்ள வஸ்து வெளிப்படுமென நிரூபித்தல்.



கவி.

ஊக்கி யப்பர சீவர் தங்க
ளுடம்பி ரண்டு மிலக்கண
வாக்கி யப்படி நீக்கி னுலொரு
வஸ்து வேபர வஸ்துவே.

(இதன் பொருள்.)

ஊக்கி —உற்சாகங்கொண்டு
அப்பரசீவர் தங்கள்—அந்தப்பரஜீவர்களின்
உடம்பு } சமட்டிவியட்டியான தேகங்கள்
இரண்டும் } இரண்டையும் [பிரகாரம்
இலக்கணவாக்கியப்படி—லட்சணவாக்கியப்
நீக்கினுல்—பிரித்துவிட்டால்
ஒரு வஸ்துவே—ஒப்பற்ற கூடத்த பிரமமே
பரவஸ்து—மேலான அயிக்கிய வஸ்துவாம்.

(இ-ம்.) விலட்சணமானகூடஸ்தபிரமமே சலட்சணமான அத்துவிதவஸ்து என்பதாம்.

(அ-கை.) அவ்விலக்கணை மூன்று என நிரூபித்தல்.

கவி.

ஓரில் விட்டதும் விட்டி டாதது
முபய மும்மென வுணர்வுளோர்
தேரி லக்கணை திரிவி தத்தி
விசைப்பர் மற்ற தியம்புவாம்.

இதன் பொருள்.

ஓரில் —விசாரிக்கின்
விட்டதும் —விட்டலக்கணையெனவும்
விட்டிடாததும்—விடாத லக்கணை யெனவும்
உபயமும்மென—விட்டுவிடாத லக்கணையெனவும்
உணர்வுளோர் —அறிவுள்ளவர்கள்
தேரிலக்கணை —தெரிந்தறியுமிலக்கணைகளை
திரிவிதத்தி விசைப்பர் } மூன்றுவிதமாகச் சொல்லுவார்கள்
மற்றதுஇயம்புவாம்—அதனைச்சொல்லுவாம்

(இ-ம்.) முற்கூறிய இலக்கண வாக்கிய மூன்று விதம் எனவும் அவற்றினும மினைய யெனவும் கூறினர் என்பதாம். (72)



(அ-கை.) விட்டலக்கணையின் சொரூப நிரூபித்தல்.

கவி.

மஞ்சு கூப்பிட லென்றல் போலவும்
வடபகீரதி யுள்ளதே
விஞ்சு கோடமி தென்றல் போலவும்
விட்ட லக்கணை யாவதே.

(இதன் பொருள்.)

மஞ்சு —மஞ்சமானது
கூப்பிடல் என்றல் போலவும் } சத்திக்கின்றதென்று சொல்லுதல் போலவும்
வடபகீரதி —வடகங்கையினிடத்து
உள்ளதேவிஞ்சு கோடம தென்றல் போலவும் } பெரியவிடைச்சேரி இருக்கின்ற தென்று சொல்லுவதுபோலவுமிருக்கும்
விட்டலக்கணை யாவது } விட்டலக்கணை எனப்படுவது

மஞ்சு கூப்பிடுமா என்று அதைவிட்டு அதற்குள் ஒருபுருடன்இருந்துகூப்பிடுகின்ரு

னென்று லட்சியிப்பது போலவும். கங்கை கண் இடைச்சேரி இருக்குமா என்று அதை விட்டு அதன் கரையில் இடைச்சேரி இருக்கின்றதென்று லட்சியிப்பது போலவும், சடமான தேகாதிகள் அறியுமா என்று அவற்றைவிட்டு அதன்கணுள்ள தேகியான கூடத்தனே அறிகின்றானென்று லட்சியிப்பதனால் விட்டலக்ஷணை எனப் பெயராயிற்று எனக் கொள்க.

(இ-ம்.) அவித்தியா மயமான அனாத்மாவை விட்டு வித்தியா மயமான ஆத்மாவை லட்சியிக்க வேண்டும் என்பதாம். (73)

(அ-கை.) விடாத லக்கணையின் சொரூப நிரூபித்தல்.

கவி.

சிவலை நின்றது வெள்ளை போயின
தென்று செப்புதல் போலவே
கவலை யின்றி விடாத லக்கணை
யென்று நீகொள் கருத்திலே.



(இதன் பொருள்.)

சிவலைநின்றது—சிவப்பு நிற்கின்றது
வெள்ளைபோயின தென்று } வெள்ளை போகின்ற தென்று [போல
செப்புதல்போல —ஒருவன் சொல்லுமாறு
கவலையின்றி —துன்பம் இன்றி
விடாத்லக்கணை யென்று } விடாதலக்கணையாம் என்று
நீ கொள் கருத்தில்—நீ கருத்திற்கொள்வாய்

சேமாவையும் வெள்ளாவையும் கண்டாயோ என்பதற்குச் சிவலை நிற்கின்றது வெள்ளை போகின்றது என்ற வசனத்தில் செம்மை வெண்மை என்னும் குணங்கள் அசேதனமாதலினானும், தாமொரு முதல் அன்றாகையானும் போக்கு வரவு முதலிய செயல்கள் தமக்குரியது அன்றெனக் கண்டு அவை காரணமாகத் தமக்கு அபேதமாயும் முதலாயும் உள்ள வடிவமாகிய குணியை அங்ஙனே தேடுற்றோர்க்குக்குறிப்பித்து நின்

றாற்போலச் சச்சிதானந்தம் என்னும் குணங்கள் அசேதனமாதலினானும், தாமொரு முதலன்றாகையானும் பிரவிர்த்தி நிவிர்த்தி முதலிய சக்திகள் தமக்குரியது அன்றெனக் கண்டு அவை காரணமாகத் தமக்கு அபேதமாயும் முதலாயும் நின்று எங்கணுஞ் சதோதயமாக விளங்குஞ் சுயஞ்சைதன்னிய சொரூபமாகிய குணியை அங்ஙனே தீவரதரர்க்குக் குறிப்பித்து நிற்றலின் இவ்வுவமை கூறலாயிற்று.

(இ-ம்.) வஸ்துவுக்குரிய குணங்காரணமாக அவ்வஸ்துவை லட்சியிக்க வேண்டும் என்பதாம். (74)

(அ-கை.) விட்டுவிடாத விலக்கணையின் சொரூப நிரூபித்தல்.

கவி.

மேவும் விட்டு விடாத லக்கணை
மெய்ம்மை யாதெனி னந்தவித்



தேவ தத்த னெனும்பொ ருட்படி
சிந்தை செய்திடு தீரவே.

(இதன் பொருள்.)

மேவும் விட்டு விடாத லக்கணை } முன்சொல்லிய விட்டு விடாத லக்கணையின்
மெய்ம்மை யாதெனின் } உண்மையாதென்றால்
அந்தத்தேவதத்தன்—அந்தத்தேவதத்தனே
இத்தேவதத்தன் —இந்தத் தேவதத்தன்
என்னும் பொருட்படி } என்னும் அருத்தத்தின்படி
சிந்தைசெய்திடுதீரவே—தீர்வையாகச்சிந்திப்[பாய்

அநிர்த சட துக்கமான கற்பனை சொரூபத்தை விட்டுச் சச்சிதானந்த யதார்த்த சொரூபமே யாவுமென்று ஒன்றையும் விடாமற் சிதானந்தமாத்திரமாய் இருத்தலின் விட்டுவிடாத லக்கணை எனப் பெயராயிற்று.

(இ-ம்.) பிரமமே கூடத்தன் கூடத்தனே பிரமமென்னும் இடத்தில் இவ்விரு நாமங்களும் நீங்காமல்நீங்கித் தனியாய் நின்றதே அத்துவித சொரூபம் என்பதாம். (75)

(அ-கை.) விட்டுவிடாத விலக்கணைப் படி தன்னைத்தானாகக் காண்பாயென நிருபித்தல்.

கவி.

விட்ட லக்கணை தனையும் விட்டு
விடாதலக்கணை தனையுநீ
விட்டு விட்டு விடாத லக்கணை
யால்வி ளங்கு விளங்கவே.

(இதன் பொருள்.)

| | |
|---|---|
| விட்டலக்கணை தனையும் விட்டு | விட்டலக்கணையால் நிச்சயித்த நீயென்னுங் கூடத்தனையும் நீங்கி |
| விடாத லக்கணை தனையும் விட்டு | விடாத லக்கணையால் நிச்சயித்த அது என்னும் பிரமத்தையும் நீங்கி |



| | |
|---|---|
| விட்டு விடாத லக்கணையால் | யாவற்றையும் விட்டு விடாமல் ஏகமாய் விளங்கியவானு என்னும் பரவஸ்துவால் |
| விளங்கு விளங்க | யாவும் தானாய் விளங்கும்படி விளங்குவாய் |

எனவே யாவையும் நீக்கித் தான்மாத்திரம் இருப்பது விட்டலக்கணை எனவும், இங்ஙனம் இருக்கின்ற தானே யாவுமாய் இருப்பது விடாதலக்கணை எனவும், சர்வமுமல்ல சர்வமும்ஆமென்றவசனத்தில் தானும் தான் அல்லவென்ற இரண்டு பதத்தினும் உள்ள தாமல்ல எனப் படுபாதியாதலானும் தான் என்பதே முழுதினும் இருக்கையானும் விட்டுவிடாத லக்கணை எனவும் பொருள் படுமாறு காண்க.

(இ-ம்.) இதுவே சாமவேதத்தின் முடியின் விளங்கிய மகாவாக்கியத்தின் பத பதார்த்தங்களின் நிச்சயம். இந்நிச்சயப்படி

தானாய் விளங்குவதே தன் சொரூபம் என்பதாம்.

(76)

(அ-கை.) முன் உபதேசித்த குருவாக்கியப்படி சுருதி நிச்சயத்தையும் தெரிந்து அதன்படியே அனுபவம் காணத்தொடங்கிய சீடன் வினாவல்.

கவி.

போது மேவிய தேசம் விட்டொரு
புருடனைக்கொளு மாறுபோ
லோது மீருடல் கண்டு விட்டத
னுண்மை காண வுரைத்திடே.

(இதன் பொருள்.)

போது மேவிய—காலமும் இருந்த
தேசம் விட்டு —தேசமும் (வேடமும்)விட்டு
ஒரு புருடனை—ஒரேபுருடனை [தைப்போல்
கொளுமாறுபோல் —கொள்ளுகின்றவிதத்
ஓதுமீருடல்—முன்சொல்லிய இரண்டு தனு
கண்டுவிட்ட—தரிசித்து நீக்கிய [வையும்



தன் உண்மை காணா } தானென்னுந்தத்துவத்தைத் தரிசிக்க [சீடன்வினாவ
உரைத்திடு —அருள்செய்யவேண்டுமெனச்

ஈருடல் என்றது சீவனுக்குக் காரியோபாதி எழும் ஈசுரனுக்குக் காரணோபாதி எழும் எனக்கொள்க.

எனவே, ஒரு புருடன் பொருட்.செல்வத்தை விரும்பும் காலத்து இப்பூவிற்கு அரசனாகவும் அருட்செல்வத்தை விரும்புங்கால் அவ்வனத்தில் துறவியாகவும் இருந்தபோதிலும் அவ்வேடங்கட்கு அரசன் துறவி என்னும் நாமரூபமே அன்றி அப்புருடன் எக்காலத்திலும் ஒருவனே ஆவன். எங்ஙனம் எனின். ஆத்மகோடிகளைச் சவரக்ஷணை பண்ணும் நிமித்தம் அவர்களிற் துஷ்டநிக்கிரக சிட்டபரிபாலனம் செய்யும் தொழிலுக்குரிய அரசவேடங்கொண்ட புருடனே பின்பு தன்னைச் சவரக்ஷணை பண்ணும் நிமித்தம் தனது

இந்திரியங்களிற் குரூரமான காமக்குரோதா
திகளைக் களையும் நிக்கிரகமும் விவேகமாதிய
வைகளைக் காக்கும் பரிபாலனமும்செய்தற்கு
உரிய தவவேடம்கொண்டான்எனக் கண்ட
அக்கணமே அவனே இவன் இவனே அவன்
என்னும்ஏகத்துவம் விளங்கும்; அது விளங்
கக் காலம் வேடம் இடம் என்னும் விகற்பம்
தோன்றாதவனாக விளங்கும். அதுபோலச்
சதோதயமாக விளங்கிய ஓர் வஸ்துவே தன்
உல்லாசத்தினால் தனது அம்சமாகத் தோன்
றிய ஆத்மகோடிகளைச் சவரட்சணை செய்யும்
நிமித்தம் அவர்கள்உள்ளத்தின்கண்ணிருந்த
அவர்கள் துர்க்குணத்தை மாற்றிச் சற்குணங்
களை வருவித்து அதனால் தானாக விளங்கச்
செய்யும் சிருட்டியாதிதொழிலுக்குரிய ஈசுர
வேடங்கொண்ட பிரமமாகவும், இவ் ஆத்ம
கோடிகளிடத்துத் தானிருப்பதைத் தானா
கவே காணுநிமித்தம் தானே தனித்தனியே
தன்னைச் சிந்திக்கும் விசாரணை செய்யும்



தொழிலை யுடைய சீவவேடங் கொண்ட
கூடத்தனாகவும், பிரமமே கூடத்தன் கூடத்
தனே பிரமமெனக் காணும்போது அவன்
இவனென்னும் துவித நீங்கிச் சுயஞ்சித்தாக
வும் விளங்குமாதலின் அவ்வேதார்த்தத்தை
உள்ளபடி அறிவதே விட்டுவிடாத லக்கணை
யின் பயனென்பதாயிற்று.

(இ-ம்.) ஆசிரியர் பிரமோபதேசத்தினா
லுஞ் சுருதி விசாரணையினாலும் அனுக்கிரகம்
செய்த சுத்தாசுத்தமாயுள்ள சீவேசுரகூடத்த
பிரமமாகியும் அவை அல்லாததாகியும் விளங்
கும் தானெனப்படும் பரவஸ்துவை அனுப
வத்திற் காட்டும்படி வினாவினனென்பதாம்.

(அ-கை.) வாக்கியார்த்தம் அனுபவமா
கத் தரிசிக்கும்படி நிரூபித்தல்.

**கவி—வேறு.**

பிரியாவுயிர் காரியமா முடலும்
பிரமத்துறு காரணமா முடலுங்

கரியாகிய வாதனையுங் கழியக்
காட்டும்படி கண்டுகொள் கண்ணுறவே.

(இதன் பொருள்.)

பிரியாஉயிர் —சீவனைவிட்டு நீங்காத
காரியாமா உடலும் } காரியஉபாதியாகிய மூன்று சரீரமும்
பிரமத்துழு —பரனைவிடாமற் பொருந்திய
காரணமா முடலும் } காரணஉபாதியாகிய மூன்று சரீரமும்
கரியாகிய } இவற்றிற்குச் சாட்சியாகிய கூடத்த பிரமமென்னும்
வாதனையும் கழிய } துவித வாசனு தோஷமு நீங்க
காட்டும்படி —நான் காண்பிக்கும்பிரகாரம்
கண்டுகொள் கண்ணுற. } நீ பிரத்தியட்சமாகத் தெரிந்துகொள்

(இ-ம்.) மகாவாக்கியத்திலுள்ள மூன்று பதார்த்தங்களின் சத்தாசுத்தங்களை நீக்க



அவற்றின் உண்மையை அனுபவமாகத் தரிசிப்பிக்கத் தொடங்கினதாம். (78)

(அ-கை.) இவ்வாறன்றிச் சகல கேவலங்களாற் காணப்படாதெனல்.

கவி.

கரணத்திர ணிற்பினு மப்பொருளைக்
காணக்கிடை யாதவை கையறவே
மரணப்படி னும்மது கண்டுகொளும்
வழியில்லை யெனும்படி நீமதியே.

(இதன் பொருள்.)

கரணத்தின் —கரணசமூகங்கள்
நிற்பினும் —இருந்தாலும்
அப்பொருளை —அக்குருதுரியத்தை
காணக்கிடையாது—தரிசிக்கக்கூடாது
அவை —அத்தத்துவங்கள் [னும்
கையறவே மரணப்படினும்— முழுதுநசிக்கி
அது —அக்குருதுரியத்தை

கண்டுகொளும்—தெரிந்து கொள்ளும்
வழியில்லை எனும்படி } மார்க்கமில்லை என்னும் விதத்தை
நீ மதி —நீ தெரிந்துகொள்வாய்

(இ-ம்.) தன்னை அறிவறியாமைகளால் அறியக்கூடாதென்பதாம். (79)

(அ-கை.) அச் சகலகேவலங்களே அவத்தாத்திரயமெனல்.

கவி.

எந்தக்கர ணங்களு மேவனனு
விதன்வாதனை யால்விட யங்களொடே
யந்தக்கர ணங்கள் பொருந்தல்கனு
வவைமாய்தல் சுழுத்தி யவத்தையதே.

(இதன் பொருள்.)

எந்தக்கரணங்களும் } அகக்கரண புறக்கரணங்கள் அனைத்தும்
மேவனனு—மேவியது சாக்கிராவத்தையாம்



இதன்வாதனையால்—இச்சாக்கிர வாதனையோடும்
விடயங்களொடே —விஷயங்களுடன்
அந்தக்கரணங்கள் —அகக்கரணங்கள்
பொருந்தல்கனு —சேர்வது சொப்பனு அவத்தையாம்
அவைமாய்தல் —அவ்விரு கரணங்களும்ஒடுங்கிநிற்றல்
சுழுத்தியவத்தையது—சுழுத்தி யவத்தையாம்

(இ-ம்.) முன் அறிவறியாமைகளால் அறியப்படா என்பதை அவைகள் அவத்தாத்திரயமென வற்புறுத்தி அவற்றினிடமாய் விளங்கும் துரிய அனுபவத்தைக் குறிப்பால் தரிசிப்பித்ததாம். (80)

(அ-கை.) மேல் மூன்றுகவியானும் குறிப்பித்த சுவானுபவப் பிரத்தியக்ஷத்தின் அருமை இனையதென விளக்கல்.

கவி—வேறு.

வினவிற் பரத்தையறி வுறுதற்
கவத்தைபுலன் வினைமாறியே
நனவிற் சுழுத்திநிலை வரினப்
பொருட்டிகழு நலனாகவே.

(இதன் போருள்.)

வினவில்பரத்தை அறிவுறுதற்கு — சொல்லுமிடத்து பரவஸ்துவை அறிதற்கு
அவத்தைபுலன்—மூன்றுஅவத்தையும் இவற்றை அறியும்மூன்றுஅபிமானிகளும்
வினை மாறி — இவைகள் இருந்து அறிதற்குத்தானமாகிய மூன்று தேகமும் நீங்கி
நனவிற் சுழுத்தி நிலை வரின் — சாக்கிர சுழுத்தியின் தன்மை வந்தால்
அப்பொருள்திகழு நலனாகவே — அப்பரவஸ்து ஆனந்தானுபவமாய்விளங்கும்

(இ-ம்.) யாவும் தோன்றியும் தோன்றாது இருக்கும் அவசரத்தின் உள்ள துரியமே துரியாதீதமாதலின் அது தனது சொரூபம் என விளக்கினார் என்பதாம்.





(அ-கை) அங்ஙனம் அருமைப் பொருளாயுள்ளது இனையதெனக்காட்டுவான்வேண்டி முப்பதத்தினுள் தத்துவம் பதத்தில் இலக்கியார்த்தம் இந்நிலையதென விளக்கல்.

கவி.

திவிதத் தவத்தைகளை யறிவுற்ற
வத்துரிய நிலைசீவனே
யிவிதத்தி லப்புருட னனவுற்ற
வத்துரிய நிலையீசனே.

(இதன் போருள்.)

திவிதத்தவத்தைகளை—அவத்தாத்திரயங்களை
அறிவுற்ற —சாட்சியாக நின்று அறிந்த
அத்துரியநிலை—அத்தன்மையான துரியமே
சீவன் —கூடத்தனும்
இவ்விதத்தில்—இவ்விதமாக
அப்புருடன் —அக்கூடத்தன்.
நனவுற்ற —விராட்டாதிய மூன்றுஅவத்தைகளையும் அறிந்து சேடித்துநின்ற

அத்துரியநிலை —அத்தன்மையான துரியமே
ஈசன் —பிரமமாம்

(இ-ம்.) சமட்டி வியட்டி அவத்தாத்திரயங்களை அறிந்து அதற்கு மேலாய் நின்ற சீவபரதுரியமே கூடத்தபிரமம் எனக்கூறியதாம். (82)

(அ-கை.) எனைய அசிபதத்தின் இலக்கியார்த்தம் இந்நிலையதென விளக்கல்.

கவி.

அகிலக் கரிப்பரம துரியப்
பொருட்டுரிய மதுவாகையே
புகலுற்ற தத்தொமசி யெனுமுப்
பதத்தின்முடி பொருளாவதே.

(இதன் பொருள்.)

| | |
|---|---|
| அகிலம் கரி பரமதுரியப் பொருள் | சமஸ்தத்திற்கும் சாட்சியாக விளங்குகின்ற ஈசுர துரியமான பிரமமே |



துரியம் —சீவதுரியமாம்
அது —அச்சீவதுரியமே
ஆகையே —பரதுரியமாக அயிக்கமாதலே
புகலுற்ற —வேதமுடிவிற்கூறிய
தத்தொமசி எனும்—அது நீயானா என்கின்ற
முப்பதத்தின்—மூன்று பதத்தின்
முடிபொருளாவது —முடிந்தபொருளாவதாம்

(இ-ம்.) மகா வாக்கியார்த்தங்களின் முடிந்த பிரமவஸ்துவே தானென்பதற்குப் பொருளாமென அனுபவத்திற் பிரத்தியட்சமாக விளக்கினார் என்பதாம். (83)

(அ-கை.) அவ்விளக்கத்தால் உள்ளபடி விளங்கிய மாணாக்கன் தனது சுவானுபவத்திற்கு வியந்து ஆசிரியரைப் பணிதல்.

கவி.

நிமலப் பொருட்சுருதி நெறியிற்
பெறக்கருணை நிதிகூறவே

யமலப்பொருட் பெருத லருமைத்
தெனக்கழறி யடிவீழவே.

(இதன் பொருள்.)

நிமலப்பொருள் சுருதி நெறியில் பெற — நின்மலமான அத்துவித வஸ்துவை வேதமார்க்கமாய் அடையும்படி

கருணைநிதி கூற — கருணாநிதியான ஆசிரியர் அனுக்கிரகிக்க

அமலப்பொருள் பெறுதல் — களங்கரகிதமான தன்னை அடைதல்

அருமைத்தெனக் கழறி — அருமை அருமை எனத் துதித்து

அடி வீழ — பாதத்திற் சிரம்படும்படி சாஷ்டாங்கமாகச்சேவிக்க

'அமலப்பொருட் பெறுதல் அருமைத்தெனக் கழறி அடிவீழவே' என்பதனால் அது விளங்கிய மாணாக்கன் எனப் பொருள் அமையப் பெற்றாம்.

(இ-ம்.) அனுபவம் அபரோட்சம் ஆனதைக் கண்டு அதிசயித்ததாம். (84)



(அ-கை.) அபரோட்சஞான அனுபவம் அதீதமாகும் பொருட்டு அறுதித் திருவடி தீட்சை செய்யத் தொடங்குதற்கு உரிய மங்கல அபிடேகம் செய்தல்.

கவி.

தமரக் கலைக்களவு தெரிவுற்ற
தற்பொருள தனையீகுவா
னமரர்க் களப்பரிய பதநற்
புனற்கொடுசெய் தபிடேகமே.

(இதன் பொருள்.)

தமரக்கலைக்களவு தெரிவுற்ற — நாதரூபமாயுள்ள வேதரகசியங்களைத் தெரிந்த

தற்பொருள தனை — தானாகியபொருளை

ஈகுவான் அமரர்க்கு — மாணாக்கனுக்கும் தேவர்களுக்கும் கொடுப்பான்வேண்டி

அளப்பரிய — அளவிட்டறிதற்கு அரிய

பதநற் புனற் கொடு — ஆசிரியர் தனது பாததீர்த்தத்தைக் கொண்டு

தெய்தபிடேகம் —மங்கல ஸ்நானம் செய்வித்து

உயர்வு சிறப்புஉம்மை எஞ்சியது.

(ப-ம்.) அறுதித் திருவடி தீட்சையைத் 'தற்பொருள் அதனை ஈகுவா' னெனவும், பாத தீர்த்தத்தினது மகிமைதோன்ற 'அமரர்க்கு அளப்பரிய பதநற் புனற்கொ' டெனவும் கூறினர் என்க. இவ்வாறன்றித் தமரக் கலைக்கு-நாதரூபமான வேதாகமங்களுக்குள்ள, அளவுதெரிவுற்ற-முடிவு தெரிந்த, எனினும் அமையும்.

(இ-ம்.) முத்தி உலகுக்கு அரசனைகப் பதமுடிசூட்டிப் பட்டாபிஷேகம் செய்வான் கருதி அதற்குரிய மங்கலஸ்நானஞ் செய்வித்தார் என்பதாம். (85)

(அ-கை.) விபூதிப்பிரசாதம் அனுக்கிரகித்தல்.



கவி.

பவளத்தின் வைத்தவமிர் தினின்மிச்சி
விட்டினிய பரிவோடுமார்
தவளப் பொடிக்கவச மெனவிட்
டுடற்பகைக டலைசாயவே.

(இதன் பொருள்.)

பவளத்தின்வைத்த—பவளம் போன்ற அதரத்தில் வைத்த

அமிர்தினின் —அமுதில்

மிச்சிவிட்டு—சேடமான பிரசாதங்கொடுத்து

இனிய பரிவோடும் ஆர்தவளப்பொடி } இனிமையான் அன்போடும் வெண்மை நிறைந்த விபூதியை

கவசமென —வச்சிரகவசம்போல்

உடற்பகைகள் —தேகமுத னுதலாயினுமுள்ள சத்துருக்கள்

தலைசாயஇட்டு —நசிக்கும்படிதரித்து

பவளமென்றது—உவமை ஆகுபெயர்.

(இ-ம்.) எதிரீடின்றித் தானேதானாக விளங்கும்படி அதன் குறியான விபூதியைத் தரித்துப் பிரசாதமும்அருளினர் என்பதாம்.

(அ-கை.) பாதமென்னும் முடியினாற் பட்டாபிஷேகம் செய்வித்தல்.

**கவி.**

உதகத் துடற்பொருளோ டுயிர்கைக்கொ
டுச்சிமிசை யொருபோதொடே
பதகத் தலத்தையிட விருகைத்
தலத்தோடிரு பதமேவவே.

(இதன் பொருள்.)

ஒருபோதொடே —ஏககாலத்திற்றானே
உதகத்து —சலத்தினால்
உடற்பொரு ளோடுயிர் } மாணக்கன் தத்தஞ்செய்த உடல் பொருள் ஆவியை
கைக்கொடு —ஆசிரியர் ஏற்றுக்கொண்டு
உச்சிமிசை —அவனது சிரசின்மேல்



பதகத்தலத்தைஇட —பாதமாகிய கிரீடந் தரிக்க
இருகைத் தலத்தோடு —அவன்தனது உபய கரங்களோடும்
இருபதமேவ —அவரது உபயபாதங் களையும் நமஸ்கரித்து

(இ-ம்.) பட்டாபிஷேகமான அறுதித் திருவடிதீட்சை செய்தனர் என்பதாம். (87)

(அ-கை.) ஆசிரியர் தாம் அனுக்கிரகித்த சத்தசங்கற்பரகித சுவானுபவாதீதமான மோட்ச சாம்பிராச்சிய அனுபவத்தை வினவுதல்.

**கவி.**

ஓழியப் புலக்கணுப விடதப்
பொருட்டெரிய் வுளஞானமாம்
விழியைக் கொடுத்துமொழி யெனமுப்
பதப்பொருளும் வெளியாகவே.

இதன் போருள்:

ஒழியப்புலக்கண்—விடயதிருட்டிநீங்கவும்
உபநிடதப் பொருட்டெரிய } வேத முடிவின்கணுள்ள மகாவாக்கியார்த்தம் பிரசன்னமாகத் தரிசிக்கவும்
உளஞானமாம் —சத்தாசாமான்னிய பிரஞ்ஞை என்னும்
விழியைக் கொடுத்து—அதீத திருட்டியைக் கொடுத்து
முப்பதப்பொருளும் —தத்துவமசி என்னும் திரிபதார்த்தமானது
வெளியாக —யாவருக்கும் பிரத்தியட்சமாக
மொழிஎன —சொல்வாய் என்று ஆசிரியர் அனுபவம் கேட்க

(இ-ம்.) முத்தி உலகிற்கு அரசுசெலுத்தும் முறைமை வினவினதாம். (88)

(அ-கை.) ஆசிரியர் அனுக்கிரகித்த மரபின்படி மாணாக்கன் தனது அனுபவத்தைச் சொல்லப்புகுவதைக் கூறுவாமெனல்.



கவி.

நனவைத் துவக்கிமுடி துரியத்தை
முற்றவிறை நவினீதியே
மனவர்க்க மற்றவனு பவமுற்ற
சிற்கனவின் வலியோதுவாம்.

(இதன் போருள்.)

நனவைத்துவக்கி —சாக்கிரமுதல்
முடி துரியத்தைமுற்ற—மேல்துரியமீறுக
இறை —ஆசிரியர்
நவினீதியே —அருளிச்செய்தஒழுங்கின்படி
மனவர்க்கமற்ற —மனோசந்ததிநீங்கிய
அனுபவம் —சுவானுபவத்தால்
உற்ற —விளங்கிய
சிற்கனவின் —ஞானசொப்பனத்தின்
வலியோதுவாம் —வல்லமையைக்கூறுவாம்

கனவென்பது; மனம் யாவத் ரூபமாய்த் தோன்றி மறைதல்போல ஞானமே யாவத் ரூபமாய்த்தோன்றி மறைவது.

(இ-ம்.) விடயானுபவநீங்கி யாவும்பிரமானு பவமாக அனுபவிக்கும் முறைமையைக் கூறத் தொடங்கினதாம். (89)

(அ-கை.) சாத்திக திசையில் அனுபவிக்கும் சிவசாக்கிரானுபவம் கூறல்.

கவி—வேறு.

புரண மாகவே புறம்புள
புலன்களு மந்தக்
கரண மியாவையும் வழங்கிட
நனவெனக் கண்டேன்.

(இதன் பொருள்.)

புறம்புள புலன்களும் } புறம்பினுள்ள புலன்களாகிய புறக்கரணங்களும்
அந்தக்கரணம்—மனமுதலிய அகக்கரணங்களுமாகிய
யாவையும் —அனைத்தும்
புரணமாகவே—பரிபூரண ஆனந்தமாக



வழங்கிடம்—சஞ்சரிக்கும் இடத்தை
நனவெனக் கண்டேன் } வியட்டி சீவனுக்குச் சுத்த சாக்கிரமென்னத் தரிசித்தேன்

(இ-ம்.) பிரம சந்நிதானத்திற் பிரகிருதி முதல் விடயபரியந்தமாயுள்ள கற்பனைகளைச் சொரூபாம்சமான ஆனந்தமாக விளங்கிக் கொண்டிருப்பது கூடத்த சாக்கிரம் என்பதாம். (90)

(அ-கை.) சிவ சொப்பனானுபவங் கூறல்.

கவி.

புரண மாகவே புறம்புள
புலன்கெட வந்தக்
கரண மியாவையும் வழங்கிடங்
கனவெனக் கண்டேன்.

(இதன் பொருள்.)

புறம்புள் —புறத்திலுள்ள
புலன்கெட —இந்திரியங்கள் ஒடுங்காநிற்க

அந்தக்கரணம் இயாவையும் — அகக்கரணங்கள் அனைத்தும்

புரணமாகவே—பரிபூரணபோதமாகவே

வழங்கிடம் —சஞ்சரிக்கும் இடம்

கனவெனக் கண்டேன் — வியட்டிசீவனுக்குச்சுத்தசொப்பன மெனத் தரிசித்தேன்

(இ-ம்.) பாஞ்சபூத பௌதிக திருட்டி நீங்கியவிடத்து அவற்றின் வாசனைகள் சுத்த சங்கற்பாகாரமாகவும் பிரம சந்நிதானத்தில் அதன்அம்சமான சித்துருபமாகவும் சஞ்சரிப்பதே சீவனுக்குச் சுத்த சொப்பனம் எனக் கூறியதாம். (91)

(அ-கை.) சீவசுழுத்தியின் அனுபவம் கூறல்.

**கவி.**

மரண மாகிய திசையிது
வெனும்படி மனாதி
கரண மியாவையு மிறந்துள
சுழுத்தியுங் கண்டேன்.



(இதன் பொருள்.)

மரணமாகிய திசை இது எனும்படி — மரணதிசைஇதுஎன்று யாவரும்சொல்லும்படி

மனாதிகரண மியாவையு மிறந்து — மனமுதலிய எக்கரணங்களும் நசித்து

உள சுழுத்தியும் கண்டேன் — சத்தாமாத்திரமாயுள்ள வியட்டி சீவனுக்குச் சுத்த சுழுத்தியும்தரிசித்தேன்.

'மரணமாகிய திசையிது வெனும்படி' என்பதற்குஉதாரணம் திருவள்ளுவர் "உறங்குவது போலுஞ் சாக்காடு" என்பதனாலறிக.

(இ-ம்.) சங்கற்பரகிதமான சூனியத்தைச் சத்தாக தரிசித்தது என்பதாம். (92)

(அ-கை) சீவ துரிய அனுபவங் கூறல்.

**கவி.**

எஞ்ச லின்றியெக் கரணமு
மிறந்திருண் டிருந்த
துஞ்ச லங்குணர் போதமாந்
துரியமுங் கண்டேன்.

(இதன் பொருள்.)

எஞ்சலின்றி —குறைவில்லாமல்
எக்கரணமும் —எந்தக்கரணங்களும்
இறந்திருண்டி ருந்த துஞ்சலங் குணர்போதமாம் } நசித்துச் சூனியமாகஇருந்த உறக்கமான அச்சூனியத்தை அறிந்தசுத்த சைதன்னியமான
துரியமுங் கண்டேன் } வியட்டி சீவனுக்குச் சுத்த துரியத்தையும் தரிசித்தேன்

(இ-ம்.) சூனியத்தை உணரும் போதத்தைக் கூடத்தனைத் தரிசித்ததென்பதாம்.

(அ-கை.) ஈசுர சாக்கிர அனுபவங் கூறல்.

**கவி.**

துரிய மாகிய போதமோர்
துளக்கமற் றனைத்தின்
கரிய தாயிருந் திடம்பர
னனவெனக் கண்டேன்.

(இதன் பொருள்.)

துரியமாகிய —சிவதுரியமென்னுங் கூடத்தனாகிய



போதம் —ஞானமானது
ஓர்துளக்கமற்று—ஓர் அளவு இன்றி
அனைத்தின் —விராட்டாதியசகலத்திற்கும்
கரியதாயிருந் திடம் } சாட்சியாக ஆனந்தானுபவமாயிருந்த இடம்
பரனனவெனக் கண்டேன் } பரனது சுத்த சாக்கிரம் எனத் தரிசித்தேன்

(இ-ம்.) கூடத்தனேவிராட்டாயும்சிருட்டியாதிய பஞ்சகிருத்தியத்திற்குச் சாட்சியாயும் நின்று அறியும் இடமே ஈசுரசாக்கிரமென்பதாம். (94)

(அ-கை.) பரசொப்பன அனுபவம் கூறல்.

**கவி.**

புணர்ந்த விச்சகத் தொழித்துணர்
போதமாந் தனையே
யுணர்ந்த மற்றது பரன்கன
வெனும்படி யுணர்ந்தேன்.

(இதன் பொருள்.)

புணர்ந்த —பகிர்முகத்திற்பொருந்தின
இச்சகத்து —இப்பாஞ்சபூதபவுதிகத்தை

ஒழித்து —நீக்கி
உணர் —இவைகளைச்சித்தாகஅறிகின்ற
போதமாந்தனை —ஞானத்தை
உணர்ந்த —சாட்சியாய் அறிந்த
மற்றது —அவ்விடமே
பரன்கனவு எனும்படி உணர்ந்தேன் } பரனுக்குச் சுத்த சொப்பனம் என்பதாக அறிந்தேன்

(இ-ம்.) சமட்டி அந்தரங்கத்தில் விவித மாக விளங்கினஇடமே பரசொப்பனம் என்ப தாம். (95)

(அ-கை.) பரனுக்குச் சுழுத்தி அனுபவம் கூறல்.

கவி.

சான்று சாக்கிய மிறந்திடத்
தானிருந் தமையுந்
தோன்று ருவிடம் பரன்சுழுத்
தியதெனத் துணிந்தேன்.



(இதன் பொருள்.)

சான்று சாக்கியம் } இரண்ய கர்ப்பாவத்தையை அறிந்த சாட்சியும்அஃதறியும் பொருளான பிரபஞ்சமும்
இறந்திடத் தானிருந்தமையும் } தனது ஸ்புரணமாக அடங்க அவ்வவசரத்திற் . தானிருந்த வகையும்
தோன்றா விடம் பரன் } தோன்றாத சத்தா சாமனிய மான இடம் பரனது
சுழுத்திஎனத் துணிந்தேன் } சுத்தசுழுத்தியவத்தையாகத் தெளிந்தேன்.

(இ-ம்.) பகிர்முகத்தினுள்ளயாவும் சத்தா மாத்திரமாக விளங்குவது பரனுக்குச் சுத்த சுழுத்தி என்பதாம். (96)

(அ-கை.) பரனுக்குத் துரியானுபவம்கூறல்.

கவி.

மரித்த தென்றுணர்ந் துரைத்தது
மரித்திடந் தனிலே
தெரித்த போதமே ததுபரன்
துரியமாய்த் தெளிந்தேன்.

(இதன் பொருள்.)

மரித்ததென்று —யாவு நசித்ததென
உணர்ந்துரைத்ததும்-தெரிந்துசொன்னதும்
மரித்திடந்தனிலே தெரித்த போதம் } நசித்தசூனியமான சத்தில் தெரிவித்த போத வடிவாய் நின்றதும்
எது அது —எதுவோஅதுவே
பரன்துரியமாய்த் தெளிந்தேன் } பரனுக்குச் சுத்த துரியமாகத் தெரிந்தேன்

(இ-ம்.) சர்வசூனிய சாட்சியாக விளங்கும் பிரமமே பரதுரியம் என்பதாம். (97)

(அ-கை.) சிவசாக்கிர அனுபவம் கூறல்.

**கவி.**

இறையெ னும்பொருட் டுரியமே
யென்னையாண் டவனே
மறையி னந்தநற் பதப்பொரு
ணனவென மதித்தேன்.



(இதன் பொருள்.)

இறை எனும்பொருள்—ஈசுரசத்தார்த்தமான
துரியமே —பரதுரியமான ஆனந்தமே
என்னை ஆண்டவனே } அடியேனைத் தடுத்து ஆண்ட ஆசிரியரே
மறையின்அந்தம் —வேதமுடிவின்கணுள்ள
நற்பதப் பொருள் } நல்லஅசிபதார்த்தமான வஸ்து
நனவென மதித்தேன் } பிரமசாக்கிரமென அறிந்தேன்

(இ-ம்.) சர்வசூனிய தரிசனமாகிய பரதுரியமே பிரமத்திற்குச் சாக்கிரமென மதிய கதத்தில் தரிசித்ததாம். (98)

(அ-கை.) சிவசொப்பன அனுபவம்கூறல்.

**கவி.**

பண்டை விச்சுவ வாதனை
பழுதுபோய் முழுதுங்
கண்ட கண்ணதே யாகிய
கனவதுவுங் கண்டன்.

(இதன் பொருள்.)

பண்டை —முன்னுள்ள
விச்சுவவாதனை —சகத் வாசனையாகிய
பழுதுபோய் —குற்றம் நீங்கி
முழுதுங்கண்ட-யாவையும்தானாகத்தரிசித்த
கண்ணதேயாகிய-சின்மாத்திரமாகவிளங்கிய
கனவதுங்கண்டேன் —சிவசொப்பனத்தை
யும் தரிசித்தேன்

(இ-ம்.) யாவும் சின்மாத்திரமான லீலா விபூதியோடு விளங்குவதே பிரமசொப்பன மெனத் தரிசித்தது என்பதாம். (99)

(அ-கை.) சிவசுழுத்தி அனுபவங்கூறம்.

கவி.

காட்சி யாவையுங் கண்ணதா
வக்கண்ணுங் கரைந்த
மாட்சி யாகிய வகோசர
முறக்கமாய் மதித்தேன்.



(இதன் பொருள்.)

காட்சியாவையும்—அறிபொருளனைத்தும்
கண்ணதா —அறிவே வடிவாக விளங்க
அக்கண்ணும் —அவ்வறிவுவடிவும்
கரைந்த —தானாகக் கரைந்த
மாட்சியாகிய —மேலாகிய
அகோசரம்—சத்தாசாமானியமானவதீதமே
உறக்கமாய் மதித்தேன் } சிவத்திற்குச் சுழுத்தியாக அறிந்தேன்

(இ-ம்.) போதாதீதமான சத்தாசாமானியமே பிரமத்திற்குசுழுத்திஎன்பதாம். (100)

(அ-கை.) சிவதுரிய அனுபவங்கூறல்.

கவி.

அருந்த வாமறை யந்தமா
மகோசரந் தனினீ
யிருந்த வாறறி வித்தவா
றெங்ஙன மிறை[illegible]பேன்.

(இதன் பொருள்.)

ஆவியே —எனதுஉயிராகிய ஆசிரியரே
அடியேன்செய்—அடிமை செய்யவேண்டிய
கைம்மாறு —பதில்உபகாரம்
உனக்கென் னெனில் பாவியேன் } தேவரீருக்கு என்னவென்றால் யாவுந்தான் எனப் பாவிப்பதையும் விடுவேன்
பண்டே அது தானும் உன் னுடையதாம் } (அஃது எனென்றால்) முன்னமே அப் பாவனையும் உமது சங்கற்பமாதலால்

'பாவியேனது தானுமுன் னுடையதாம் பண்டே' என்பதற்குப் பாவியேனாகிய நான் என்பது முன்னமே உனது உரிமை ஆயிற்று எனப் பொருள்கொள்ளினும் அமையும்.

(இ-ம்.) சொரூப சங்கற்பம் சொரூபமாக விளங்குவதே கைம்மாறு என்பதாம். (103)

(அ-கை.) எனதுபணி நினது அடியார் பாலென்ன நிரூபி[illegible]



கவி.

ஆவல் செய்தென தாக்கையுள்
ளளவுநின் னடியா
ரேவல் செய்வதே யன்றிமற்
றொன்றுநா னறியேன்.

இதன் பொருள்.

ஆவல் செய்து —அன்புகொண்டு
எனதாக்கை உள்ளளவும் } எனது பிராரத்ததேகம் உள்ளபரியந்தம்
நின்னடியார் —தேவரீர் அடியார் ஏவிய
ஏவல் செய்வதே யன்றி மற்றொன் றும்நானறியேன் } பணிசெய்வதேயல்லாமல் வேறொரு செய்கையும் செய்ய யான் தெரிகிலன்

(இ-ம்.) அடியார் பணியாவது விதேகபரியந்தம் தனது சங்கற்பத்தை எல்லாம் தன்மயமாக்கும் செய்கை இச்செய்கையேயன்றி வேறுகண்டிலன் என்பதாம். (104)

(அ-கை.) இவ்வாறுய[illegible] மாறென எய்பதத்தையு[illegible]

கவி.

இறவி லெப்பத மும்பெற
வேண்டிலே னென்றும்
பிறவி வேண்டுவ னின்திருப்
பணிசெயப் பெறினே.

(இதன் பொருள்.)

| | |
|---|---|
| இறவில் எப் பதமும்பெற | மரணதசையில் யாதொரு பதத்தையும் அடைய |
| வேண்டிலன் | —விரும்புகில்லேன் |
| என்றும்என்தி ருப்பணி செய | எப்போதும் தேவரீர் திருப் பணிகளைச் செய்ய |
| பெறின்பிறவி வேண்டுவன் | பெற்றால் இவ்விதப்பிறப்பை யே விரும்புவன் |

எனவே, தனக்குத் தானே செய்யும் ஆசிரியர் பணியின் அருமையைக் குறிப்பித்தது என்க.

[illegible] து மயமாய் விளங்க உதித்த
(அ-கை.) என்த் சங்கற்பத்தைப் பெற
பாலென நிரூபித்தல்.





(அ-கை.) இவன் அடைந்தஅனுபவப்பேற்றின் அருமையை நூலாசிரியர் நிரூபித்தல்.

கவி—வேறு.

என்றுபல கால்விழு மெழுந் தொழு
மழும்புரியு மென்னையினியா
னென்றுபல வாகவுரை செய்தவவ
னன்பினையெ னெஞ்சுருகியே.

(இதன் பொருள்.)

| | |
|---|---|
| என்று | —இப்படி என்று |
| பலகால்விழும் | —பலதரம் நமஸ்கரிப்பன் |
| எழும் | —எழுந்திருப்பன் |
| தொழும் | —கரத்தால் அஞ்சலிசெய்வன் |
| அழும் | —அழாமல் அழுவன் |
| புரியும் | —துதிப்பன் |
| என்னை | —தேகந்தானாக நின்ற அடியேனை |
| இனி யானெ ன்றுபலவாக உரை செய்த அவன் | ஆநந்தமான பிரம சொரூபம் என்று சுருதி உத்தி அனுப வம் தந்திரம் [illegible] பல எ துக்கள் [illegible] கிரகித்த [illegible] |

அன்பினை —கிருபையை (நோக்கி)

என் நெஞ்சுருகி —இஃதென்ன அதிசயம் என்று மனது உருகி

(இ-ம்.) இவையாவும் அனுபூதி விலாசத்தின் ஆனந்த அனுபவப் பூரிப்பின் குறிப்பு என்பதாம். (106)

(அ-கை.) சத்தியோமுத்தன் ஆஞன் என்பதை நிரூபித்தல்.

கவி.

எட்டிலறி வின்றியிறை தன்னிலறி
வின்றியிவ் வுடம்பினுடனே
வீட்டிலுறை வானையினி வீடுபெறு
மென்பது விளம்புகிலமே.

(இதன் பொருள்.)

எட்டிலறிவின்றி —சுருதியினல் அறிந்த அபர ஞானமும் இல்லாமம்

[illegible] அருளிறையின் அனுக்கிர [illegible] த்திலுண்டான பரஞான [illegible] இல்லாமல்

(அ-கை.) [illegible] யாமென்ன நிரூபி[illegible]



வீட்டில் —திரஞானமென்னும் சுவானுபூதியாகிய முத்தி உலகில்

இவ்வுடம்பினுடனே உறைவானை —இத்தேகத்தோடும் சத்தியோ முத்தனய் அடைந்த சசிவன்னனை

இனிவீடுபெறுமென்பது விளம்புகிலம் —மேற்றேகாந்தத்தில் முத்தியையடைவான் என்பதை யாம் உரைக்கிலம்

(இ-ம்.) சுருதி நிச்சயமும் ஆசிரியர் உபதேச நிச்சயமும் ஏகமெனக்கண்டு அனுபவித்த அக்கணமே முத்தியாதலின் இவனும் சத்தியோமுத்தன் ஆஞன் என்பதாம். (107)

(அ-கை.) இவன் அடைந்த பதத்தின் லேசமான புண்ணியத்தின் மகிமையை நிரூபித்தல்.

கவி.

வஞ்சவலி யானரகின் வீழ்பிதிர
ரந்நரகு பாழ்பட வி[illegible]
விஞ்சைவலி யாலனை[illegible]
சுராதிபர்கண் மே[illegible]

(இதன் பொருள்.)

இவன் —இச்சசிவன்னன்
வஞ்சைவலியால்—முன் வஞ்சமாகச் செய்த பாவ வலிமையினுல்
நரகின் —மாபூதி நரகத்தில்
வீழ்பிதிரர் —வீழ்ந்தஇவன் பிதிரர்கள்
அந்நரகுபாழ்பட—அந்தநரகம் பாழாகும்படி
விஞ்சைவலியால்—இவன் அடைந்த ஞான வலிமையினுல்
சுராதிபர்கள் —இந்திராதியர்களது
மேலுலகம் —சுவர்க்கலோகத்தில்
அடையயேறினர்—ஒருங்கே கூடி ஏறினுர்கள்

(இ-ம்.) புண்ணிய பாவ மிகுதியின் பலன் இப்பவத்தில் தானே அனுபவிப்பன் என்னும் சுருதிப்பிரமாணத்திற்கு அனுபவம் ரட்டியதாம். (108)

[illegible] ன் அடைந்த ஞானத்தின்
(அ-கை.) [illegible] த்தல்.
பாலென நிரூபித் [illegible]



கவி.

தேவரு மனித்தரு மிவன்ருெழில்
வியந்துரை செயப்படுவதோ
மூவரும் வணங்கிமுடி யாலவன
தேவல்செய முந்துறுவரே.

(இதன் பொருள்.)

தேவரும் —தேவர்களும்
மனித்தரும் —மானிடர்களும்
இவன்தொழில் வியந்து } இஞ்ஞானியினது மகிமையை அதிசயித்து
உரைசெயப்படுவதோ—சொல்லத்தக்கதோ
மூவரும் —மும்மூர்த்திகளும்
முடியால் —சிரசினுல்
வணங்கி —நமஸ்கரித்து
அவனது ஏவல்செய } அந்த ஞானியினதுசங்கற்பித்த பணியைச் செய்ய
முந்துருவர்—நான் நான் என [illegible]

(இ-ம்.) யாவும் ஞான[illegible]
[illegible] கும் என்பதாம்.

(அ-கை.) ஞானவான் மகான்மிய நிரூபித்தல்.

கவி.

ஞானியை நரன்சுர னெனு மொழிக
ஞாலமுய நாதனருளா
மேனியது கொண்டுதனை நல்கவரு
மென்றறையும் வேதமுடிவே.

(இதன் பொருள்.)

ஞானியை — ஞானவானை
நரன் சுரன் எனுது ஒழிக } நரன் என்றும் தேவன் என்றும் சொல்லாமல்விடுக
ஞாலமுய — உலகத்தார் உய்யும்பொருட்டு
நாதன் அருளாம்-பரமசிவன் தனதருளாகிய
மேனியதுகொண்டு-மானிடச்சட்டைசாற்றி
தனை நல்க ... ரு } தற்சொருபத்தை அனுக்கிர
... க்க எழுந்தருளும் என
ரட்டியபசா...
... ந்தம் பகற அறையும்
... ர்.

(அ-கை.) ...
பாலென நிரூபித்...



(இ-ம்.) ஞானியைப்பூசிக்குந்தகைமை தேவர்களுக்கும் நாகர்களுக்குமின்று என்பதாம்.

கவி.

மூல மான மறைப்படி மூலமே
கோல மான பரிசுகள் கூறுவாம்.

சசிவன்னபோதம்
முற்றிற்று.



## சூதசங்கிதை.

ஞானியின் பெருமையும் நாடினரடையும்
ஈனமில் பயனும் இனைத்தென விசைத்தல்.

விசேஷவுரை.

"பரமாத்மாவைத் தானேயென்றறிந்த பிரஹ்மவித்வான், மனத்தினால் எந்தலோகங்களை சங்கல்பித்தாலும். எ...
விரும்பினாலும் அவற்றை ...
ருன். அவன் ஸர்வ காம...

விஷயங்களையு மடைந்தவன்) ஆகையால் தனக்காயினும் பிறர்க்காயினும் எந்த இஷ்டத்தையும் பூர்த்தி செய்யவும் செய்துவைக்கவும் வல்லவன். ஆகையால் மேலானதாகிய சிரேயஸை விரும்பும் முமுக்ஷுக்கள் அந்த பிரஹ்மஜ்ஞானியைப் பக்தியால் பூஜித்தல் வேண்டும்" என்னும் முண்டகோபநிஷத்தின் வாக்கியப்படி ஞானியை உபாசிக்கத் தக்கவன். ஈச்வரனும் அந்த ஞானியைத் தொடர்ந்து செல்வனெனில் அவனுடைய மகிமையைப்பற்றி என்னசொல்வது! ஞானி பூஜையால் அடையக் கூடாதது ஒன்றும் இல்லை. பாவிகளுள் முதன்மையான சசிவன்னனும் ஞானியின் கடாக்ஷ வீக்ஷண்யத்தால் சச்சிதாநந்த சிவவடிவமானானெனின் மற்றோர் நிரூபணமும் வேண்டுமோ? பலபடி [illegible] ட்டியபகா[illegible] எந்த இடத்தில் அகண்ட [illegible] வ ஞானி: சரீரத்தோடு (அ-கை.) [illegible] பாவென்ன நிரூபிக்[illegible]



விளங்குகிறானோ, அந்த இடத்தில் மோக்ஷமென்பது பிரஸன்னமாயிருக்கிறது. ஆகையினால் சிரேயஸை (வீட்டை) யானாலும், பிரேயஸை (அறம், பொருள், இன்பங்களை) யானாலும் விரும்புவவர்கள், அந்தப் பிரஹ்மஜ்ஞானியைத் தஞ்சமெனவடைந்து உடல் பொருளாவிகளை அவனுக்குத்தத்தஞ்செய்து கபடமற்ற பக்தியோடு பூசித்தல் வேண்டும். இங்ஙனஞ் செய்யின், பாக்கியவானாய் உள்ள முமுக்ஷுவுக்கு, அந்த மகான் கருணையோடு ஜீவப் பிரஹ்ம ஐக்கிய அத்வைத ஸ்திதியை உபதேசிப்பன். இத்தகைய அபய நிலையை அடைய, ஞானிபூசையைவிட மற்றொருசாதனம் இன்றாம். இதுவே பரமமான சித்தாந்தமானது.

### [illegible] பே[illegible]ர்.

அந்த பிரஹ்மஞானி[illegible]
ஆவி இவைகளைத் தத்த[illegible]

பொன்னம்பல சுவாமி



சூதசங்கீதை.

இவனுக்குப் பணிவிடை செய்வது பிரஹ்ம
வித்தையை அடைய உத்தமமான ஸாதனம்.
பரமாத்ம விஜ்ஞானிக்குள்ளே அங்கு
முத்தியிருக்கிறது. இதில் சந்தேகமில்லை.
இவனுக்குச் சமமாக யாதொரு தேவனு
மில்லை, ஹரிஹராதிகளும் அவனுக்குச் சம
மன்று.

என்னும் பிரஹ்மகீதையின் பிரபலப்
பிரமாணங்களால் நன்கு விளங்கும்.

ஞானியின் பெருமை.

ஞாலமுண்டவன் றலையிசைசுமப்பன் மெய்ஞ்
ஞானிவேண்டுவ தெல்லாம்
ஆலமுண்டவ னவன்பின்னே திரிகுவன்
அவனடித் துகட்கன்றே
சீலமன்னரு மற்றுள தேவருந்
[illegible] திருத்[illegible]ம் [illegible]ணிந்தேத்தக்
[illegible]ட்டியபா[illegible] [illegible]லையிசை வைபெனக்
[illegible] என்[illegible]த்தோன்.

(அ-கை.) [illegible]

பாலென நிருபி[illegible]